# பிற்சேர்க்கை

''உண்மை முத்தி நிலை'' என்னும் இந்நூலாசிரியர் யார் என்பதில் ஐயம் நேர்ந்துள்ளது. இந்நூலின் மூல ஏடுகள் சிதைந்து இருந்தமையின் இது ''உண்மை முத்தி நிலை ஆராய்ச்சி'' என்னும் மற்றொரு கட்டுரைக்கு வேறானது என்று தெரியவில்லை. இந் நூலின் மூலஏடுகளில் முதலிரு பக்கங்கள் கிடைக்கவில்லை. மூன்று, நான்காம் பக்கங்கள் உள்ள ஏடு ஒன்று சற்று சிதைந்த நிலையில் தற்போது கிடைத்தது. இப்பக்கங்களில் புதுவை தந்தி வெளியீட்டு மன்றத்தார், சுத்தசாதகம், உண்மை முத்தி நிலை ஆகிய இருநூல்களுக்கும் எழுதிய பதிப்புரை காணப்படுகின்றது.

தேவகோட்டை சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்தார் உண்மை முத்தி நிலை என்னும் நூலை எழுதியவர் தவத்திரு.ச.கந்தைய பிள்ளையவர்கள் எனவும், தவத்திரு. பொ.முத்தைய பிள்ளையவர்கள் எழுதியது ''உண்மை முத்தி நிலை ஆராய்ச்சி'' எனவும் தெரிவித்துள்ளனர்.

இவற்றை உற்று நோக்கினால் ''உண்மை முத்தி நிலை'' என்ற இச்சிறந்த நூல், யாழ்ப்பாணம் தவத்திரு.ச.கந்தையபிள்ளையவர்களால் எழுதப்பட்டது என்றும், இந்நூலைக் கண்ணுற்ற தூத்துக்குடி தவத்திரு.பொ.முத்தைய பிள்ளையவர்கள் ''உண்மை முத்தி நிலை ஆராய்ச்சி'' என்ற கட்டுரை எழுதி வெளிப்படுத்தினார்கள் என்றும், இக்கட்டுரையைக் கண்ட யாழ்ப்பாணம் தவத்திரு.ச.கந்தைய பிள்ளையவர்கள் ''உண்மை முத்தி நிலை ஆராய்ச்சி'' என்ற தலைப்பில் மீண்டும் ஒரு விரிவான கட்டுரை எழுதி அனுப்பினார்கள் என்றும், இதுவும் தந்தி வெளியீட்டு மன்றத்தாரால் வெளியிடப்பட்டதென்றும் தெரியவருகிறது. பின்னைய கட்டுரைகள் இரண்டும் கிடைக்கவில்லை. எனினும் அன்பர்கள் உண்மை முத்தி நிலையை உள்ளவாறு உணர்வதோடு கட்டுரை, இவற்றை எழுதிய ஆசிரியர்களின் உண்மையையும் உளங்கொண்டு பயனடைய வேண்டுகிறோம்.

# உண்மை முத்தி நிலை
## இரு பெருங் கட்டுரைகள்


யாழ்ப்பாணம்
**திரு.ச.கந்தைய பிள்ளை**
அவர்களும்

சிதம்பரம்
**டாக்டர் கு.சீநிவாசன்,**
M.Sc., Ph.D., F.B.B.S. (Lond.)
அவர்களும்
எழுதியவை.



வெளியிடுவோர்
**சமரச சுத்த சன்மார்க்க அன்பர்கள்,**
**கோயமுத்தூர்,**
1967.

# பொருளடக்கம்



*****

# பாயிரம்

"சுத்த வடிவுஞ் சுகவடிவாம் ஓங்கார
நித்த வடிவு நிறைந்தோங்கும் - சித்தெனுமோர்
ஞான வடிவுமிங்கே நான்பெற்றே னெங்கெங்கும்
தானவிளை யாட்டியற்றத் தான்"

– இராமலிங்கர்

சிவபரம்பொருளின் திருவருள் துணையால் எழுதப்பட்ட இரு பெருங்கட்டுரைகள் இந்நூலில் உள்ளன. பெற்ற உடம்பு இது சாகாத் திருவருட்சித்தியுற்று அருளாய் வெளியாய் ஞான வடிவாய்ச் சிவமாதலே (மரணமிலாப் பெருவாழ்வே) உண்மை முத்தி ஆகுமென இவை சான்று காட்டி நிறுவுகின்றன.

தமிழகத்தில் இற்றைக்கு அறுபதாண்டுகட்கு முன்னர் சைவசித்தாந்தம் மலர்ந்து பரவிய காலத்தில் திருவாவடுதுறை ஆதீன சைவப்பிரசாரகரும், தேவகோட்டைச் சிவாகம சித்தாந்த பரிபாலன சங்கத்துச் சித்தாந்த சாத்திர போதகருமாகிய தூத்துக்குடி சிவத்திருவாளர் பொ.முத்தையபிள்ளை அவர்கள் "உண்மை முத்தி நிலை" என்னும் கட்டுரையை எழுதினார்கள். தூலத்தோடு மறைதலே உண்மை முத்தியாகும் என்று அவ்வாராய்ச்சிக் கட்டுரை அறுதியிட்டுரைக்கும்; விருத்தாசலத்தில் ஸ்ரீ பெரியநாயகியம்மை திருவருட் பிரசாதம் பெற்றுக் குமாரதேவர் திருவாய் மலர்ந்தருளிய சுத்தசாதகம் என்ற சுத்த சித்தாந்த சாத்திரத்தை அடிப்படையாகக் கொண்டது; தேவார திருவாசகம் முதலான சைவத் திருமுறைகளும், திருவாய் மொழி, திருப்புகழ் முதலிய பிரபந்தங்களும் நுதலிய உண்மை முத்தி இதுவே என வற்புறுத்தும். அந்நூல் இந்நாளில் கிடைத்தற்கரிதாயினமையின் அதனை அப்படியே பதிப்பித்துள்ளோம்.

தூல தேகம் சன்மார்க்கச்சார்பினால் வான்வடிவ சித்தியுற்றுக் கடவுள் மயமாகும் ஒளி நெறியை, "என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கந்தானே" என்று திருவருட்பிரகாச வள்ளற் பெருமான் வகுத்தருளுகின்றார். அடிகள் கூறியருளிய உண்மை முத்தியைப் பற்றியது மற்றைய கட்டுரை தமிழகமெங்கும் திரு.அருட்பா பரவி இராமலிங்கப் பெருமானது அருள்முரசு கொட்டப்படும் இந்நாளில் உண்மைச் சன்மார்க்க சித்தியே இயற்கைத் தொன்மை நெறியாம் உண்மைமுத்தி என விளக்கும் இக்கட்டுரையைச் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழக தாவரப்பேராசிரியர் சிவத்திருவாளர். கு.சீநிவாசன் அவர்கள் எழுதி உதவினார்கள். அவர்கட்கு எங்கள் அன்புகலந்த நன்றி என்றென்றும் உரியதாகும்.

இவ்விரு கட்டுரைகளையும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையுள்ள நம்மவர்கள் நலங்கருதி அருட்துணைகொண்டு பதிப்பிக்கின்றோம். உண்மை அன்பர்கட்கு இந்நூல் பெரும்பயன் தருமென்பது திண்ணம்.

இங்ஙனம், அன்பர்கள்

கோவை,
26/01/1967

சுந்தரம்,
சண்முகம்.

கணபதி துணை

திரு.ச.கந்தையா பிள்ளையவர்கள் எழுதிய

# உண்மை முத்தி நிலை

"நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்அடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்துகி டப்பதே."

**அ**ம்மையப்பராகிய எம்பெருமான் திருவடிக்கமலங்களை மன மொழி மெய்களால் வணங்கி எம்பெருமக்களாகிய சமயகுரவர் முதலிய தத்துவப்பெரியோர் அனுக்கிரகத்தாலும் சந்தானகுரவர் முதலிய வித்துவப்பெரியோர் அனுக்கிரகத்தாலும் சிற்றறிவினனாகிய அடியேன் உண்மை முத்திநிலை என்னும் இச்சிறிய கட்டுரையை ஒருவாறு எழுதி வெளியிடத் துணிந்தனன். இதனைக்குறை கூறுவாருளராயின் அக்குறை அடியேனுக்கு உரிமையாகாது இக்குரவர்களுக்கே உரிமையாகும். ஆதலால் இப்பொழுதைய வித்துவப்பெரியாரும் அடியேனை மன்னித்து அனுக்கிரகம் புரிவார் என்பது திண்ணம்.

சின்னாள் முன்னர் ஆப்த நண்பர் ஒருவர் குமாரதேவர் அருளிச்செய்த **சுத்தசாதகப்**பிரதி ஒன்றை அனுப்பி வைத்தனர். இதனைப்பன்முறை படித்து ஆராய்ந்தபோது இந்நூல் சமயசாஸ்திரங்களாக விளங்கும் மற்றைய நூல்களில் ஒருசிறிதும் காணப்படாத வேத ரகசியங்கள் மலிந்த உண்மைச் சைவ நூல் ஆதல் தெற்றெனப் புலப்பட்டது. இதனால் கழிபேருவகையும் இறும்பூதும் அடைந்த அடியேன் தூலத்தோடு மறைதலே உண்மை முத்தி எனக்கூறும் இந்நூலைப் படிப்பவர்கள் மணிவாசகர், அறுபத்துமூவர் முதலிய வைசப்பெரியார் அடைந்த முத்திநிலையை நன்குணர்ந்து கொள்வார்கள் என்பது முதலாக ஒருசில கூறி சில பத்திரிக்கைகளில் வெளியிட்டனன். அதனைக் கண்ணுற்ற சிலர் தூலத்தோடு மறைதல் அசம்பாவிதமும் அசாத்தியமுமாமெனவும் தூலம் பழுதடைய அதனைப் பிணமாக விடுத்துச் சூக்குமத்தோடு உயிர் பிரிந்து அடையும் முத்தியே வேதாகம சாத்திர சம்மதமான முத்தி எனவும், ஆதலால் **சுத்தசாதகம்** என்னும் நவீன நூல் ஒன்று மாத்திரம் கூறுவது அங்கீகாரமாகாது எனவும் ஆலயங்களில் சடுதியில் இறந்தோர் எல்லாம் மணிவாசகர், நந்தனார் முதலியார் போல முத்தி அடைந்தவராவர் எனவும் அவ்வாறு இறந்தவர்களுக்கும் ஆலயங்களில் பிரதிஷ்டையும் வழிபாடும் விழாவும் நடைபெறுகின்றன எனவும் வேறு சிலர் உடம்பு பொய்யாதலின் அது பிணமாக அழிந்து போக உயிர் சூக்குமத்தோடு பிரிந்து அடையும் முத்தியே பரமுத்தியாகிய உண்மை முத்தி எனவும், பிறந்தன எல்லாம் இறந்தேவிடும் எனவும், தூலத்தோடு மறைதல் ஒருவகை சித்தியும் பதமுத்தியும் கற்பிதநிலையுமாம் எனவும், இவற்றை சூக்ஷ்மபுத்தியால் அறியவேண்டுமெனவும் பிறசிலவும் கூறி சில பத்திரிக்கைகளில் வெளியிட்டனர்.

உலகத்திலே கல்வி, செல்வம், அதிகாரம் என்பன காரணமாக உன்னத நிலையில் வாழ்ந்த புண்ணியமுடையோரையும் ஏற்ற ஏற்ற வகையால் கௌரவப்படுத்திப் போற்ற வேண்டியது நமது முக்கிய கடனே. ஆயினும் இவர் பொருட்டாக மணிவாசகர் அறுபான் மும்மை நாயன்மார் முதலிய தத்துவப்பெரியார் அடைந்த முத்தியை மறுக்கத்துணிதல் இயற்கை விரோதமும் பாதகமுமே ஆகும். சமயாசாரியர் முதலிய ஜீவன் முத்தர்கள் உலகினர் போல் வாழ்ந்து பல அருட்புதுமைகளால் சைவத்தை நாட்டி பலரும் கண்டு போற்றும்படி தூலத்தோடு மறைந்து மீண்டு வராத உண்மை முத்தியை அடைந்தார்கள் என்பது ஒருவரும் மறுக்கமுடியாத உண்மையாகும். உண்மை முத்தியை விளக்கி சைவத்தை நாட்டவந்த நூல்களுக்குள்ளே **சுத்த சாதகம்** ஒன்றே தத்துவப்பெரியார் அடைந்த உண்மை முத்தியை வெளிப்படையாக விளக்கிக் கூறிற்று. மற்றைய சாஸ்திரங்கள் உண்மை முத்தியின் இயல்பை விளக்கிக்கூறாமையால் அவற்றையே முடிவான நூல்கள் என நம்பிய உலகினர் தத்துவப் பெரியாராகிய ஜீவன் முத்தர் இயல்பையும் அவரடைந்த உண்மை முத்தியின் இயல்பையும் அறியாது மயங்குவாராயினர். **சுத்த சாதக**த்தை ஒருவரும் மறுக்கமாட்டார் என்பதும்,

மறுப்பார் உளராயின் அவர் உண்மைச்சைவராகார் என்பதும் நிச்சயமாகும். இந்நூல் அரசராயிருந்து பூர்வ புண்ணிய மிகுதியால் உண்மைத்துறவு பூண்டு விருதாச்சலம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் உலக நாயகியாகிய பெரியநாயகி அம்மையார் திருவருட்பிரசாதம் பெற்ற குமாரதேவ வள்ளலார் அருளிச்செய்த 16 சாஸ்திரங்களுள்ளே மிகச்சிறந்ததாகும். ஜீவர்கள் அடைய வேண்டிய சுத்த நிலையாகிய உண்மை முத்தி நிலையையும் அதற்குரிய பொதுவான சாதக யோகங்களையும் நன்கு விளக்கிக் கூறுதலால் இந்நூல் ***சுத்த சாதகம்** என்னும் பெயர்த்தாயிற்று. இவற்றைக் கூறுமுகத்தால் பிரபஞ்சம் விரிந்த வகையையும் பதிபசுபாச இலக்கணங்களையும் சீவர், சீவன்முத்தர், பரமுத்தர் இலக்கணங்களையும் அவரவர்க்குரிய தனு, கரண, புவன, போகங்களையும் இந்நூல் நன்கு விளக்கிக் கூறுகின்றது. உருவத்தால் சிறியதாயினும் பொருளால் அளவிடப்படாத உலவாக்கிழியாக இந்நூல் விளங்குவதை இதனை ஆராயும் அறிஞர்கள் நன்குணர்ந்து கொள்வார்கள் என்பதில் ஐயமில்லை. பிராப்த அனுபவம் மருளுடம்பினராகிய ஜீவர்களுக்கே உரியது என்பதனை உணராது அவ்வநுபவத்தால் இறந்தோருள்ளே கல்வி, செல்வம், அதிகாரம், ஆடம்பரவேடம் என்பன காரணமாக உன்னத நிலையில் வாழ்ந்தோர் யாவரையும் பிராரப்த அநுபவம் ஒழிந்து உடம்பு மாறப்பெற்ற தத்துவப்பெரியாராகிய ஜீவன் முத்தர்போல முத்தி அடைந்தவராக மதித்துத் தாமும் அவ்வாறே இறந்தோர் நிலையையே அவாவி அவரை வழிபட்டுப் பிறவிவலைப்பட்டு உழலும் தன் பிள்ளைகள் மாட்டு இரங்கி அவரை உய்வித்தற் பொருட்டே உலகமாதாவாகிய பெரியநாயகியம்மை இந்நூலை குமாரதேவர் வாக்கில் நின்று சில காலத்துக்குமுன் அருளினாள் என அறிக. அவ்வுண்மை இந்நூல் வரலாற்றுச் செய்யுட்களால் அறியப்படும். இந்நூலையே முக்கிய ஆதாரமாகவும் திருவாசக முதலிய தத்துவப்பெரியார் திருவாக்குகளையும் பிறசிலவற்றையும் இடைஇடையே பிரமாணமாகவும் கொண்டு இக்கட்டுரை எழுதப்படுகின்றது.

தத்துவப் பெரியாரெல்லாம் தாம் அருளிய பாடல்களில் நரை, திரை, மூப்புப்பிணிகள் ஒழிந்து எம்பெருமான் திருவடியை அடையவேண்டுமெனவும் அவையொழிந்து அடையப் பெற்றோம் எனவும் பல இடங்களில் கூறியருளினர் (திருவாசகம் கண்டபத்து 6; அப்பர் தேவாரம் - திருச்சேறைத் திருக்குறுத்தொகை - 3; திருமந்திரம் சரீரசித்தியுபாயம் 4,5; கேசரி யோகம் - 3,5,7)

''நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவீயிடத்தே துறந்தார்'' (நாலடியார்)

எனப் பிறரும் நரை, திரை முதலியன ஒழியவேண்டுமென்றனர். பிராரப்த ஒழிவின்கண் தூலம், நரை, திரை, மூப்புப்பிணியால் பழுதடைந்து பூமியில் பிணமாய் விழப்பட உயிர் பிரிந்து முத்தியடைவது உண்மையானால் இப்பெரியாரெல்லாம் நரை, திரை, மூப்பைப் பொருட்பண்ணி அவை நீக்கி எம்பெருமான் திருவடியை அடையவேண்டுமென்று முறையிடவேண்டியதில்லை. தூலம் நரை, திரை, மூப்புப்பிணியால் பழுதடைந்து பிணமாகாமல் சுத்தசாதகம் கூறியபடி அத்தூலத்தோடு முத்தியடைதலே உண்மை முத்தியாகும். ஆதலாற்றான் இப்பெரியாரெல்லாம் இப்படிக் கூறினார் என்பது நிச்சயமாகும். ''பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்'' என உலகியல் நோக்கிக் கூறிய அவரே, ''மாற்றிப் பிறக்க வகையறிந்தாயில்லை'' என உண்மை நிலையையும் கூறினாரன்றோ. இறந்தன பிறக்கும் என்றமையால் தூலத்தைப்பிணமாக விடுத்துச்சென்றவர் திரும்பிப்பிறப்பார் என்பதும், அது முத்திநிலையன்று என்பதும் நன்கு புலப்படவில்லையா? (திருமந்திரம் - சரீரசித்தியுபாயம் 1,2) இறந்து பிறந்து உழலும் ஆன்மாக்கள் ஒருகாலத்து முத்தியடையவும் வேண்டுமன்றோ? இறப்புக்கும் முத்திக்கும் பேதமில்லையா? இருவகை நிலைக்கும் தூலத்தைப் பிணமாக விடுத்து செல்வதே இலக்கணமாகுமா? இவ்வாறாக உடம்பை - விட்டு உயிர் பிரிந்து முத்தியடையும் என்ற உணர்ச்சியே உலகத்தவர் பலர் முத்தியின் இயல்பை அறியாது அதனை அலட்சியமாகக்கருதுவதற்குக் காரணமாயிற்று.

* இந்நூல் விருத்தியுரையுடன் வெளியிடப்பட்டுள்ளதை விருத்தாசலம் **ஸ்ரீ குமாரதேவர்** மடாலயத்தில் பெறலாம்.

கல்வி, செல்வம், அதிகாரம் என்பன காரணமாக உன்னத நிலையில் வாழ்ந்தோரையும் அவர் இறந்தபின் ‘‘அடைந்தார், ஐக்கியமானார் - அதுவானார் - சிவமானார்’’ என்னும் உபசார வார்த்தைகளால் உலக சம்பிரதாயம் நோக்கிக் கூறுதலும் ஒருகால் அவசியமே ஆதலால் அவ்வாறு சிலபல கூறி அவரை கௌரவப்படுத்துவதே அல்லாமல் உண்மையை மறுத்துரைத்ததற்கு அறிஞர் உடன்படமாட்டார் என்பது திண்ணம். வித்துவப் பெரியோர்களாகிய வேதாந்த குரவர்களும் சித்தாந்த சந்தான குரவர்களும் புண்ணியசீலர்களே என்பதில் ஐயமில்லை. அவர்கள் ஏறக்குறைய எல்லாப்படிகளையும் தாண்டி இருப்பார்கள். பெருஞ்சாத்துக்களாகிய அவர்கள் தூலம் கரைந்து அள்ளூராக்கையாகிச் சூக்குமமாக வேண்டிய ஒருபடிதான் மிச்சமாயிருக்கிறது. இதுபற்றியே சமயகுரவர் முதலிய தத்துவப்பெரியார் அடைந்த முத்தியைச் சந்தான குரவர் முதலிய வித்துவப்பெரியார் அடையவில்லையென்று அறிஞர்கள் யாவரும் ஒருமுகமாகக் கூறுகின்றனர். அபிமானங் காரணமாக ஒருசிலர் இதனை மறுத்துரைப்பது அங்கீகாரமாகாது. எத்துணைப் பெரிய மாயாசித்திகள் படைத்தவராயினும் ‘‘புற்றுமாய் மரமாய்ப்புனல் காலே யுண்டியாய்’’ (செத்திலாப்பத்து - 2) "துற்றவை துறந்த வெற்றுயிராக்கை’’யராய் வற்றிப் பாம்புகள் போலவும் ஔவால்கள் போலவும் ஆயிர வருடக்கணக்காகக் கிடப்போரும் தூங்குவோருமாயினும் எம்பெருமானருளால் அருந்தல், பொருந்தல், அனந்தல்கள் அமையப் பெற்று சஹஜ நிஷ்டாபரராய் உலகர்போல் வாழ்ந்து நமது தூலம் அள்ளூராகையாய் சூக்குமமாய்க் கரையப்பெற்றாலொழிய அவர் முத்தியடைவது முற்றாக அசாத்தியமேயாகும். உடம்பை வாட்டித் தவம் புரிவார் உண்மை காணமாட்டார் என்பதனைத் திருவாசகம் - திருவண்டப்பகுதி அகவலிலும் ‘‘அஞ்சுமடக்கடக்கென்ப ரறிவிலார்’’ (ஐந்திந்திரிய மடக்குமுறைமை-3) எனவும் ‘‘எளியவாறு செய்வாரெங்கள் ஈசனை’’ (சூக்குமபஞ்சாக்கரம் 1) எனவும் வரும் திருமந்திரச் செய்யுட்களிலும் நோக்கி அறிக. புலால் துருத்தியாகிய இத் தூலஉடல் பூந்துருத்தியாய் அமலம் பெறுதல் எவ்வாறமையுமெனில், வண்ணான் அழுக்கேறிய உடைகளை அமலமாக்கற் பொருட்டு முன்நிலையில் விளங்கும் காரமுள்ள அழுக்குகளை நிறைகண்டு பஞ்சீகரணித்து அழுக்கை அகற்றும் உபாயம் போல் குரு அருளால் சரீர பௌதீக நிறையறிந்து முன்னிலைப் பொருள்களில் இனங்கண்டு எடுத்து பஞ்சீகரணித்து நிறைகொண்டு அருந்தினால் அருந்தியது பொருந்தும். பொருந்தினால் அழியுந்தன்மையுடைய இப்புலால் துருத்தியில் சாதலைத் தரும் நிறையாகிய மாயையெனும் பாசம் அணு அணுவாக நீறி அனந்தலடையும். அதனால் இத்தூல உடல் மாறுதலடைந்து பூந்துருத்தியாக அமையுமென அறிக. இவ்வுண்மையே அப்பர் சுவாமிகளும் (பலவகைத்திருத்தாண்டகம்-1,5, திருமாற்பேறு திருக்குறுந்தொகை 3) திருமூலரும் (எட்டாவது தந்திரம், பதி பசு பாசம் வேறிண்மை-18) தமது பாடல்கள் சிலவற்றில் குறிப்பால் கூறியருளினர். ‘‘மாறுபா டில்லாதவுண்டி மறுத்துண்ணின், ஊறுபாடில்லை யுயிர்க்கு’’ (குறள்-மருந்து 5) சவிகற்ப நிருவிகற்ப நிட்டையுடையோரையும், வித்துவப்பெரியோரையும் வேடதாரிகளையுமே உலகத்தவர் பெரிய தவசிகள், யதிகள் முனீந்திரர்கள், சுவாமிகள் என்று மருளுகின்றனர். சஹஜ நிஷ்டையுடைய அறுபத்திமூவர் போன்ற ஜீவன் முத்தர்களை உலகமாக்கள் அறிவது முற்றாக அசாத்தியமே ஆகும். ‘‘சகச நிட்டைக்கும் என் சிந்தைக்கும் வெகுதூரம்’’ என்று தாயுமானவரே இந்நிஷ்டை கைவரப்பெறாது இரங்கினாரென்றால், இந்நிஷ்டையாளரை அறியமுடியாமை வியப்பன்றே. சகச நிட்டையுடையோர் தம் முயற்சியால் நிஷ்டை கூடுவதில்லை. அவர் பார்த்தால் உலகத்தவர் போலிருந்து எந்நேரத்தும் எத் தொழிலைச் செய்யினும் நிஷ்டையிலிருப்பவரேயாவர். இவரையே அருளமுதம் உண்டவர் எனவும் இவருடல் அருளாகக் கரையுமெனவும் **சுத்தசாதகம்** 63-ம் செய்யுள் முடிய நோக்கி அறிக. சகச நிஷ்டையாளராய் உண்மைச் சைவநிலை வாய்க்கப் பெற்றவர் எச்சாதியிலுமிருக்கலாம். வைஷ்ணவருள்ளும் சீவன் முத்திநிலை கைவரப்பெற்று தூலத்தோடு முத்தியடைந்தோர் பலருளர். ‘‘எச்சமயத்தும் இயற்கையை விட்டிடலாகா’’ எனச்**சுத்தசாதகம்** 83-ம் செய்யுள் கூறியதும் அறிக. தமது தூலத்தைச் சிவசம்பந்தமாய் அமலமாய் மாற்றினவரே உண்மைச் சைவராவார். ‘‘கொல்லான் புலாலை மறுத்தானைக் கைக்கூப்பி, எல்லா வுயிருந் தொழும்’’ என்னுந் திருவள்ளுவர் வாக்கும் இப்பொருட்டேயாகுமென்பது பலர்க்கும் வியப்பை தருவதாயினும் இதன் உண்மைப் பொருள் தெற்றெனப் புலப்படாததாகாது. மிருகம், பறவை முதலியவற்றைக் கொன்று அவற்றின் ஊனை உண்ணாமை ஒன்று மாத்திரமுடைய உலகச்சைவனை யார் யார் தொழுகின்றனர்? எல்லாவுயிரும் தொழுகின்றனவா? பிறவுயிர்களால் இவனுக்குத் தீங்கு விளைதல் இல்லையா? உலகத்தவரை வெருட்டி மாமிசம் சாப்பிடாமல் பண்ணுவதற்காக இப்பெரியார் இப்படிக் கூறினாரா? இதனை அறிஞர்

சிந்திப்பாராக. தமது தூலம் பிணி மூப்புகளால் பழுதடைந்து பிணமாகாதவாறு சாதகயோகங்களால் அதனை மறுத்த (மாற்றிய) அப்பர் பெருமானைக் கொல்லவந்த யானையாகிய விலங்கும் வலஞ்செய்து வணங்கிப் போந்தமையும், அவர் திருமேனி நீற்றறை அனலாலும் நீராலும் கொல்லப்படாமையும், மற்றைய மெய்யடியாரும் சராசரப் பொருள்களால் யாதும் இடையூறடைந்து மாண்டு போகாமையும் அறிக. ஜீவன் முத்தர் இயல்பை **சுத்த சாதகம்** 76ஆம் செய்யுள் முதல் 80ஆம் செய்யுள்வரை நோக்கி அறிக. வித்துவப்பெரியாராகிய பௌராணிகர், தத்துவப்பெரியார் முத்திநிலையையும் சாதகயோகங்களையும் விளக்கிக் கூறாமை குற்றமாகாது. தத்துவப்பெரியாராகிய உண்மைச் சைவரையே திருவள்ளுவர் எல்லாவுயிருந் தொழும் என்றார் என அறிக. பிற உயிர்களின் உடம்பை ஒருவன் கொன்று அருந்தாமை போலவே தன்னுடலையும் கொல்லாது அதனைச் சாதகயோகங்களால் மாற்றி நித்தியத்துவம் அடையவேண்டுமென்னும் உண்மை நிலையையும் இவ்வதிகாரத்தாற் கூறிப்போந்தனர் நம் திருவள்ளுவர் என அறிக. இக்காலத்தில் இத்தகைய சீவன் முத்தரும் இல்லை, உண்மைச் சைவமும் இல்லை. மேல் இத்தகைய உண்மை நிலையடைவதற்கு முன்கூறிய வித்துவப் பெரியாரே அருகராகவேண்டியது முறையாகும். தூலம் அமலமடைதற்கு உணவு முக்கியமாதலால் இடம், பொருள், ஏவல் வாய்ந்து உன்னத நிலையில் வாழ்ந்த சந்தானகுரவர் முதலியோர் சத்துவகுணம் பொருந்திய முன்னிலை ஆதாரங்களைத் தருவித்து இஷ்டம்போல் அருந்தியிருப்பர் என்பது பலரும் அறிந்த உண்மை. உணவு நியமத்தைக்குறித்து **சுத்த சாதகத்தில்** 43ஆம் செய்யுள் தொடங்கி 53ஆம் செய்யுள் வரையில் 86ஆம் செய்யுள் தொடங்கி 89ஆம் செய்யுள் வரையும் நோக்கி அறிக. அக்குரவர்கள் தூலமாகிய சத்தும் பலஜன்மங்களாக அமலம் பெற்று வந்திருக்கலாம். ஆதலால் மேல்வரும் ஜன்மத்தில் சற்குருநாதனருளால் அவர்களுக்கு முத்தி உளதாம் என்பது நிச்சயமாகலாம். பதமுத்தி பெற்றார் எனவும் பலர் கூறுப்படுகிறார். எத்தகைய பதங்களையடைந்தவராயினும் அவர் பின்னும் பிறந்தே தூலம் பூரண அமலம் அடையப்பெற்று ஜீவன்முத்தராய் அத்தூலத்தோடு மறைந்து முத்தியடையவேண்டியவராவர். முற்கூறிய வித்துவப் பெரியார் இத்தகைய பதங்களை அடைந்தவராகக் கொள்ளப்படலாம்.

ஆதலால் இக்குரவர்களையும், சேக்கிழார் பரஞ்ஜோதி முனிவர், கடவுள் மாமுனிவர், ஆறுமுக நாவலர், குமாரசாமிப்புலவர் முதலியாரையும் தமிழுலகம் பாராட்டிப் போற்றவேண்டியது முறையாகும். இவரெல்லாம் அடியேனிலும் பார்க்க எத்தனையோ மடங்கு கூரிய மதிப்பொலிவும் அருமை பெருமை உடையராதலால் இவர் யாவருக்கும் அடியேன் உரிமையான வணக்கமும் வாழ்த்தும் என்றும் உரிமையாகற் பாலனவேயாம்.

உலகத்திலே வேதம், ஆகமம், புராணம் முதலாகப் பெருஞ் சிறப்புவாய்ந்த பல நூல்கள் வழங்குகின்றன. அவையெல்லாம் சில சரியை கிரியைகள், சிற்சில மாயாசித்திகள், உபாசனாயோகங்கள், வர்ணாசிரம தர்மங்கள் முதலாகப் பல விஷயங்களை மிகவிரிவாகவும், தெளிவாகவும் கூறுகின்றன. உண்மை முத்தியை உணர்த்தும் தத்துவமசிவாக்கியப்பொருளை தத் அது; துவம் நீ; அசி ஆனாய் என்று இப்படியாகச்சில கூறி குருமுகமாகவே அறியவேண்டும் எனக்கூறும். ஜீவர்கள் இந்நூல்களைப் பலஜன்மங்களில் ஆராய்ந்து, இவற்றில் நம்பிக்கை வைத்துப் பின்னும் பல ஜன்மங்களில் இவற்றில் சொல்லியவாறு வழுவின்றி ஒழுகித் தலயாத்திரை, தீர்த்த ஸ்னானம், மூர்த்தி வழிபாடு முதலியவற்றால் புண்ணிய மிகப்பெற்றுப் பின்னும் மானுடஜன்மத்தை அடைந்து முத்தியடைய வேண்டுமென்னும் பேரவாக்கொண்டு அம்முத்தியினியல்பை இன்னதென்று அறியாது உழன்று பெருங்கவலையில் ஆழ்ந்து கிடப்பார்கள். இக்காலத்தில்தான் கைலைமுதற்குரவனும், சைவபரிபாலகனாகிய அத்தகைய பக்குவசீவனுடைய கருமங்களையும் அவாவையும் நிறைதூக்கிப் பார்த்து அச்சீவன் மீது கருணை கொண்டு முன்னிலையில் குருவடிவாய்ப்போந்து அங்கலிங்க ஐக்கியம் எனப்படும் தத்துவமசி வாக்கிய உண்மைப்பொருளைக்கிரமமாக உபதேசித்து அதனை அடைதற்கேற்ற சாதகயோகங்களையும் உபதேசித்தருளுவன் (தத்-அது-சிவம்-லிங்கம்; துவம்-நீ-சீவன், அங்கம்; அசி-ஆனாய்-ஐக்கியம்) இச்சாதக விதிகள் சீவர்களது ஜடபேதம் கர்மபேதங்களுக்கு ஏற்ப வெவ்வேறாய் அளவில்லாதனவாகும். இதுபற்றியே ஓதாதுணர்ந்த சம்பந்த வள்ளல் பாண்டி நன்நாட்டில் சைவத்தை நாட்டிய காலத்துப் பின்வரும் திருப்பாசுரத்தை அருளினார்.

''ஆட்பா லவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில்அள வில்லைகி ளக்கவேண்டா
கோட்பா லனவும் வினையும்குறு காமைஎந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கதக்கார்.''

''அண்ணல ருளால் அருளுந் திவ்வியாகமம்
எண்ணில் எழுபது கோடிநூ றாயிரம்''

(திருமந்திரம், ஆகமச்சிறப்பு-4) என்னுந்திருமந்திரமும் இப்பொருட்டேயாதல் அறிக.

''நல்லன நூல்பல கற்பினுங் காண்பரிதே
எல்லையி லாத சிவம் '' எனவும்

''நெறிபட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பீறிவற் றிருக்கும் சிவம்'' எனவும்

ஔவையார் கூறியதும் அறிக. ''ஆறறி யந்தனர்க்கருமறை பலபகர்ந்து'' என்னும் கலித் தொகைக் கடவுள்வாழ்த்துச் சொற்றொடரும், தம்முள்ளே ஆறுஅங்கங்களையும் கண்டு வேதாகமங்களையும் உணர்ந்து (திருமந்திரம் 8ஆம் தந்திரம் 3-176) அவற்றின் அந்தத்தையும் அணவத்தக்க பக்குவமுடைய ஜீவர்களுக்கே எம்பெருமான் ஏற்ற ஏற்றவாறு பல உபதேச மொழிகளைக் கூறியருள்வான் என்னும் இப்பொருளே பயந்து நின்றமை கண்டு கொள்க. அளவில்லாத சீவர்களுக்கு உரியவிதிகளும் அளவுபடாமையின் இவைகள் உலகில் நூல்களாக வழங்குதல் அசாத்தியமாகும். இவ்விதிகளை அப்பக்குவசீவர் வழுவறத் தாங்கி ஒழுகுவதும் மிக அரிது, அடையும் கஷ்டங்களும் பலவாகும். ''அருங்கற்பனை கற்பித்தாண்டாய் ஆள்வாரிவிமாடாவேனோ'' (திருவாசகம், கோயின்மூத்த திருப்பதிகம் 7) எனவும், ''நாடவர் நந்தம்மை ஆர்ப்பவார்ப்ப, நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப'' (திருப்பொற்சுண்ணம் 7) எனவும் பிறவுமாகவரும் மணிவாசகர் திருவாக்குகளையும் நோக்குக. சாதகயோக விதிகளால் அநுட்டிக்கப்படும் புதுவினையாகிய மதிவினையால் பழவினையாகிய விதிவினையை எம்பெருமான் நீக்கியருளிய கருணையை வியந்தே இவ்வற்புதங்களை ''அற்புதப்பத்து'' என்று மாணிக்கவாசகர் பாடியருளினார்.

''சிவாயநமவெனும் குளிகையிட்டுப்பொன்னாக் குவனிக் கூட்டையே'' (சூக்கும பஞ்சாக்கரம்-1) என்னும் திருமந்திரச் செய்யுளையும் நோக்குக. ''சிவாயநமவென்று சிந்தித்திருப்பார்க்கு அபாயமொருநாளுமில்லை'' என்ற ஔவையார் திருவாக்கும், மதிவினையாகிய புதுவினையால் விதிவினையாகிய பழவினையை வெல்லுதலாகிய இவ்வுண்மையையே உணர்த்தி நின்றது. இதனால் ஜீவன்முத்தருக்கு மாயாபோக அனுபவமாகிய பிராரப்த அனுபவம் இல்லையாதல் கண்டுகொள்க.

சத்தும் சித்துமாகிய உடலுயிர்கள் ஒன்றோடொன்று சத்துருத்துவமடைந்து பிரிந்துபோகாமல் சற்குருநாதனருளால் அறிந்து அநுட்டிக்கப்படும் சாதகயோகங்களால் அஞ்ஞானபவுதிக இருள்நீங்கி ஞானபவுதிகமாகிய ஒளிபெருகப் பெற்று அவை ஒன்றோடொன்று மித்துருத்துவம் அடைந்து நாயக நாயகியாய்க் கூடிக்குழைந்து, அள்ளூராக்கையாகிச் சூக்குமமாய், அருளாய் சிவாங்கமாதற்கேற்ற அநுஷ்டானங்களைக் கூறும், வேதாமக விதிகளாகிய உபநிஷத்துக்கள் உலகில் நூல்களாக எப்பாஷையிலும் வழங்குவதில்லையென்பது ''பத்தியா லடையும் அங்கலிங்கைக்யம் பகர்ந்திடும் உபநிடமின்றாம்'' (**சுத்தசாதகம்** 4) எனக் குமாரதேவர் கூறியவற்றானும் அறியபப்படும். உலகில் வழங்கும் நூல்களையும் உலகியல் நோக்கி உடன்படுவாராய். ''அத்தினால் இவையில் அடக்கமதென்பர்'' (**சுத்தசாகதம்** 4) எனப்பிறர் கூற்றாக அவர் கூறியதும் அறிக.

இனி அங்கலிங்க ஐக்கியம் எனப்படும் தத்துவமசிவாக்கியப் பொருளாகிய உண்மை முத்திநிலை **சுத்தசாதக** நுகலியவாற்றால் ஒரு சிறிது கூறப்படும். தூலம் தோன்றிய முறையே

சூக்குமமாய் அருளாய் ஒடுங்கிச் சிவாங்கமாதலே உண்மை முத்திநிலை'' ஆகும். ''தூலம் பழுதடைந்து பிணமாகப் பூமியில் விழுப்படுமாயின் அது பிறவி நெறியேயன்றி, முத்தி நெறி அன்று. தூல சூக்கும காரணங்கள் தம்மிற்பிரிந்து வெவ்வேறாக நிற்கமாட்டா. முத்தியடைவோர் உலகினர் காணும்படியே தூலத்தோடு மறைவார்கள் என்று மிக வற்புறுத்திக் கூறுகின்றது. **சுத்த சாதக**மென்னும் இந்நூல் என அறிக.

இவ்வுண்மைகளைச் **சுத்த சாதகத்தில்** 18ஆம் செய்யுள் முதல் 22ஆம் செய்யுள் முடிய நோக்கி அறிக. தூலம் பழுதடைந்து பிணமாக விடப்பட உயிர்பிரிந்து முத்தியடையுமென்று குமாரதேவர் யாண்டும் கூறினாரல்லர். தத்துவப் பெரியாராகிய மெய்யடியாரெல்லாம் தமது தூலம் பிணி மூப்புகளால் பழுதடைந்து பிணமாகாதவாறு அதனையே சூக்குமமாக்கி நித்தியரான உண்மையை உற்று நோக்கிமிடத்துக் குமாரதேவர் வேத ரகசியங்களை அம்பிகை அருளால் நன்குணர்ந்து கூறியமைதெற்றெனப் புலப்படும். பின்வரும் திருவாக்குகளும் தூலம் அள்ளூராக்கையாய் அருளாய்க் கரைந்து சிவாங்கமாதலே உண்மை முத்தி என்பதனைப் பசுமரத்தாணிபோல் நன்குநாட்டுதல் கண்டுகொள்க.

## திருவாசகம்

''பொய்யாயினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே''

கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே''
(சிவபுராணம்)

''அழிதரும் ஆக்கை ஒழியச்செய்த ஒண்பொருள்''

''இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி'' என்பன முதல்
''.................................................................... உருகுவது
உள்ளங்கொண்டு ஓருருச் செய்தாங் கெனக்கு
அள்ளூராக்கை அமைத்தனன்'' (திருவண்டப்பகுதி)

என்பனவற்றை உற்று நோக்குக.

''ஊன்கெட்டுணர்வு கெட்டென்னுள்ளமும் போய்
நான் கெட்டவாபாடி'' (திருத்தெள்ளேணம் - 18)

''செத்தே போனால் சிரியாரோ'' (கோயின் மூத்ததிருப்பதிகம் 8)

''தூக்கி முன்செய்த பொய்யறுத்துகளறுத் தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி யாண்டுதன் அடியரிற் கூட்டியஅதிசயங் கண்டாமே''

''செந்தீ அருளுமெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய அதிசயங்
கண்டாமே'' (அதிசயப்பத்து 8)

''செடிசே ருடலைச் சிதையா தெத்துக்கெங்கள் சிவலோகா'' (குழைத்தபத்து 2)

''என்புள்ளூருக்கி '' (குலாப்பத்து 3)
''கொம்பிலரும்பாய்க்'' (குலாப்பத்து 6)

"ஊசலாட்டுமிவ் வுடலுயிராயின இருவினை அறுத்தென்னை
ஓசையாலுணர் வார்க்குணர்வரியவன் உணர்வுதந்தொளியாக்கி
பாசமானவை பற்றறுத்துயந்ததன் பரம்பெருங் கருணையால்
ஆசைதீர்த் தடியாரடிக் கூட்டிய அற்புத மறியேனே"
(அற்புதப்பத்து 8)

"செடிசே குடிலைச் செலநீக்கிச் சிவலோகத்தே நமைவைப்பான்"

"உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடன்போ வதற்கே
ஒருப்படுமின்" (யாத்திரைப்பத்து 4,5)

## திருநாவுக்கரசு நாயனார்

"ஒளியான நெய்த்தானத்தானனைத் தொண்டராயித்
தொழுவார் சுடர்வாணரே"
(திருநெய்த்தானம் திருக்குறுந்தொகை 4)

## சுந்தரமூர்த்தி நாயனார்

"ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான்மலை உத்தமனே" (திருநொடித்தான் மலை)

## திருமூலர் திருமந்திரம்

"அழிகின்ற சாயா புருடனைப் போல
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற் கற்பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடல் போமப்பரத்தே"
(விசுவக்கிராசம்)

## திருவாய்மொழி (நம்மாழ்வார்)

"களிப்புக் கவர்வும் அற்று பிறப்புப் பிணிமூப்பிறப்புமற்று
ஒளிக்கொண்ட ஜோதியாய் உடன் கூடுவதென்றுகொலோ"
(2ம் பத்து 3ம் திருமொழி 10)

குழுமித் தேவர் குழாங்கள் கைதொழ ஜோதி வெள்ளத்தினுள்ளே
எழுவது ஓர்உரு என்னெஞ்சுள் எழும் ஆர்க்கும் அறிவரிதே
(5ம் பத்து-எங்ஙனேயோ பத்து)

**முத்துத்தாண்டவர்**

''மாணிக்க வாசகர் பேறெனக்குத் தரவல்லாயோ அறியேன்''

''கட்டையில் வைத்துச் சுட்டுவிடாதே கள்ளக்குழியில் புதைத்துவிடாதே
பொற்பூமாரி இமையோர் சொரிந்திடப் பொன்னூசல் ஆடும்
திருவாதிரை நாளில், கற்பூரதீபம்போல் எந்தன் உடலைக்
கனகசபையிற் கலந்து கொள்வாயே''

**ஔவை குறள்**

''ஐம்பதும் ஒன்றும் அழல் போலத் தானோக்கில்
உம்பர் ஒளியாய் விடும்''

''எல்லையில் இன்னமுதம் உண்டாங் கினிதிருக்கில்
தொல்லை முதல்ஒளியே ஆம்'' (வீட்டுநெறிப்பால்)

**அருணகிரிநாதர் கந்தரநுபூதி**

''கூகா வெனஎன் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோ கசிகா மணியே''

''சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னொபதே சிகனே''

**கந்தரலங்காரம்**

''சொன்ன கிரவுஞ்ச கிரியூ டுருவத் தொளைத்த வைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்ப! மௌனத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கியநிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந்தே னிறந்தே விட்டதிவ் வுடம்பே''

நம் தாயுமானப் பெருந்தசையும் இவ்வுண்மை நிலையையே அடைய முயன்று தவறியமையால் ஆற்றாமைப்பற்றிச் சடம்பொய் என்று ஒருகால் கூறினர். ஆயினும் தூலம் பிணமாகவிழ உயிர் முத்தியடையும் எனக்கூறுவாரை மறுத்து, ''உலகநெறி போற் சடல மோய உயிர் முத்தியிலகு மெனல் பந்தவியல்போ பராபரமே'' எனவும் ''தேகம் யாதேனுமொரு சித்தி பெறச் சீவன்முத்தி ஆகுநெறி நல்லநெறி ஐயா பராபரமே'' (பராபரக்கண்ணி 358,357) எனவும் கூறியவைகளால், தேகம் அமலம் பெற்று மறைதலே உண்மை முத்தி எனக் கருதினராதல் நன்கு பெறப்படும். இன்னும் வேத சாரமாகிய திருவாசகத்தையும், திருக்கோவையையும் நடராசர் சந்நிதானத்துக் கண்டு எடுத்து ஓதி அவற்றின் பொருளை அறியமுடியாது அவை தாம் அறியாததோர் நூதனப் பொருள் உடையனவாயிருந்தமை கண்ட

வேதாகம பண்டிதர்களாகிய "தில்லைவாழந்தண மூர்த்திகள்", "எம்பெருமான் எழுதிய இம்மறையின் பொருள் யாது?" என மணிவாசகரை வினாவியவிடத்து, அப்பெருமான், அதனைக்காட்டுதும் என நடராசப்பெருமானைச் சுட்டிக்காட்டி அவர் சந்நிதியில் பலருங் கண்டு போற்றும்படி தூலத்தோடு மறைந்தருளியமையாலும் அங்ஙனம் தூலத்தோடு மறைந்து சிவாங்கமாதலாகிய உண்மை முத்தியே அத்திருவாசக திருக்கோவைகள் நுதலிய பொருளாம் என வெள்ளிடை மலைபோல் விளக்கிக் காட்டியமை அறிக. சத்தும் சித்துமாகிய உடலுயிர்கள் அள்ளூராக்கையாகி நாயக-நாயகியாய்க் கூடிகுழைதற்கண் உளதாகும். பேரின்பமே உலகநிலைபோல் முன்னிலைக்கண் வைத்து ஓதப்பட்ட திருக்கோவையிற் கூறப்படுதலால் அஃதும் தூலம் சூக்குமமாய் அருளாய்க் கலந்து சிவாங்கமாதல் எனப்படும் இவ்வுண்மை முத்தி நிலையையே நுதலியதாதல் தெற்றென உணர்க.

இன்னும் நந்தனாரும், சேந்தனாரும், முத்துத்தாண்டவப்பெருமானும் பல்லோரும் கண்டு போற்றுமாறு நடராச சந்நிதானத்தில் மறைந்தமையும், ஆழ்வாருள்ளும் ஆண்டாளம்மை என்னும் மாதரார் திருவரங்கர் சந்நிதானத்துப் பல்லோருங்கண்டு போற்ற மறைந்தமையும் பிறர் பலரும் அவ்வாறே மறைந்தமையும் அறிக. ஞானசம்பந்தப்பெருமானும் அவர் திருமணங்காணச் சென்ற சீவன் முத்தர்களும் பெருஞ்சோதியில் ஒருங்கு மறைந்தமையும் அறிக. அறுபான்மும்மை நாயன்மாரும் ஏனையோரும் இவ்வாறு மறைந்தமையுமே உண்மையாதல் உய்த்துணர்ந்து கொள்க.

இவற்றால் தத்துவப்பெரியார் முத்தியடையுங்காலத்து உலகம் உய்யுமாறு திருவருட் செயலாகவே பலருங் கண்டு போற்றும்படி இப்பெரும்பேறு நிகழப்பெறும் என்பதும் தெற்றெனப் புலப்படுதல் காண்க. "அருளாய், வெளியதாய் **உலகு கண்டிடவே**" எனச் **சுத்தசாதகம்** 19ஆம் செய்யுள் கூறியதும் அறிக.

வேதரகசியம் இவ்வாறு இருக்க அதனையும் உணராது சமயாசாரியர் முதலிய தத்துவபெரியார் அருமை பெருமையும் உணராது தூலத்தோடு மறைதலே இயற்கைமுறை என்பதும் அறியாது தூலத்தோடு மறைதல் ஒருவகை சித்தியும் பதமுத்தியும் கற்பிதநிலையுமாம் எனத் துணிந்து கூறுவார் அறியாமைக்கு இரங்குவதேயன்றி வேறு செயற்பாலது யாதும் இல்லை என அறிக. தூலத்தோடு மறைதலில் வேறுபாடு காணப்படினும் அவையெல்லாம் மீண்டு வாரா நெறியே என்பதில் ஐயமில்லை என உணர்க. தத்துவப் பெரியார் சித்திகள் எல்லாம் திருவருட்செயலாக நடைபெறும் அருட்சித்திகளேயன்றி திரோதானத்துநின்று முனைப்போடு உளுற்றும் மருட்சித்திகளாகா என்பதும் அறிக. சமயாசாரியர் முதலியோர் தூலத்தோடு மறைந்தமையே மீண்டு வாரா உண்மை நெறியாம் என்பதும் உடம்பைப் புவியில் விட்டு ஏகும் நெறியெல்லாம் பிறவிநெறியேயாம் என்பதும் நன்கு கடைபிடிக்க.

இனி நம்மவர்பலர் தூலம் பழுதடைய அது பினமாகப் பூமியில் விழுந்து உயிர்பிரிந்து அடைவதும் தூலத்தோடு மறைதலும் ஆகிய இரண்டு நெறியும் முத்தியே எனவும் இவை பிராரத்தத்தின் படியாகும் எனவும் கூறி அமைவர். சிலர் "வினைப் போகமே ஒருதேகங்கண்டாய், வினைதான் ஒழிந்தால் தினைப்போதளவும் நில்லாது" என்ற பட்டினத்தார் பாட்டுங்கூறி பிராரத்த ஒழிவில் உடம்பு அழிந்தேவிடும் என்பர். பிராரத்த அநுபவம் மருளுடம்பினராகிய இவர்களுக்கே உரியது என்பதனையும் பிராரப்த ஒழிவின் கண்ணேயே மருளுடம்பாகிய மாயாதநு பிரணவ உடம்பாக மாறிச் சீவன் முத்திநிலை கைவரும் என்பதனையும், பட்டினத்தார் கூறிய "வினைப்போக" தேகம் மருளுடம்பே என்பதனையும் **சுத்த சாதகத்தில்** "பிராரத்தம் உடன்பாடு என்று எந்த நெறியும் பேசிடும்" என்னும் 24ஆம் செய்யுளாலும், "அன்னைதன் முலைப்பால்" என்னும் 25ஆம் செய்யுளாலும், கண்டு அவர் தெளிவுறுவாராக. இதுகாறும் கூறியவற்றின் சாரமாக இன்னும் ஒருசில கூறி இவ்விஷயம் முடிக்கப்படும்.

பொய்த்தல் என்றும் பொலியாது. மெய் என்றும் வாழ இடந்தரும். சீவதசையில் பொய்யாக்கப்படும் இச்சடத்துக்கு **மெய்** என்று ஒரு திருநாமம் பிரசித்தியாக வழங்குகின்றது. இது பொய் என்றே முடிவு பெறவில்லை. "உடலுயிர் உண்மை என்று ஓர்ந்து கொள்ளாதார்,

கடலில் அகப்பட்ட கட்டையொத்தாரே". (சிவவேடம்-2) "உடலும் உயிரும் ஒருங்கிக்கிடக்கும் பயிருங்கிடந்துள்ளப் பாங்கறியாரே". (கூடா ஒழுக்கம்-12)

"நான்றவிழ் முட்டை யிரண்டையுங் கட்டியிட்டு
ஊன்றி யிருக்க உடலழி யாதே" (சரீரசித்தியுபாயம்)

எனவும் பிறவுமாக வரும் திருமூலர் திருவாக்குகள் பலவற்றாலும் உடலும் உயிரும் அழியாமையும் அவை பிரியாமல் பிரிந்து ஒன்றாய் நிற்பதும் நன்கு பெறப்படும். நமது தேகமாகிய பூமியுள்ளே குண்டலி சேடசயனனாக விளங்கும் அனந்தசயனனாகிய நாராயணன் சிவமேயன்றி வேறு யார்? அமிர்தசுகவாரி, ஞான சக்தி எனக்கூறப்படும் விஷ்ணுவான நாரி அரனது அர்த்தபாகத்தை உண்டனள். அர்த்தபாகம் பெற்ற இடத்தே நமது சாதல் அழிவு பெறும். இருவினையும் சமப்பட்ட இடத்தே சீவன் சதாசிவமாய்ச் சிவமாகும் என அறிக. ஒவ்வோர் சமயத்தைத் தழுவினவர்கள், "எச்சமயத்தும் இயற்கையை விட்டிடலாகா" (**சுத்த சாதகம் 83**) என்றவாறு அவ்வச்சமயங்கறாற் பிரதிபாதிக்கப்படும் வடிவங்களையே பெரிதாகப் புகழ்ந்து கூறுவர். ஆயினும் முடிவில் யாவற்றையும் ஒன்றாகக் கண்டு கூறினமையும் அவ்வவர் பாடல்களால் நன்கு புலப்படும். "அரியலாற்றேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே" (திருவையாறு திருநேரிசை 5) எனவரும் அப்பர் திருவாக்கையும் நோக்குக. இதனால் சிவமே சத்தி, சத்தியே சிவம்; அந்தமே ஆதி, ஆதியே அந்தம்; ஆதியில்லாமல் அந்தமில்லை, அந்தமில்லாமல் ஆதியில்லை; சத்தில்லாமல் சித்தியில்லை, சித்தில்லாமல் சத்தில்லை; சத்தியில்லாமல் சிவமில்லை, சிவமில்லாமல் சத்தியில்லை; விஷ்ணு இல்லாமல் சிவமில்லை, சிவமில்லாமல் விஷ்ணுவில்லை; மெய்யில்லாமல் உயிரில்லை, உயிரில்லாமல் மெய்யில்லை; என்னும் உண்மை பெறப்படுதலும் காண்க. பொய், மெய்யில்லா விடத்துச்சத்தம் பொலியுமா? பொலியாது, பேச இடந்தராது; அசைவற்ற பிணமாகும் பொய்யும் மெய்யும் சமம் பெற்ற நாள் (இருவினையுங்கெட்டு) இவ்விரண்டுங் கெட்டு வேறு உருவம் பெறும். அது சுண்ணாம்பும் மஞ்சளும் கூடிக் குழைதலால் அவ்விரண்டின் நிறமும் கெட்டுப் பிறிதொன்று முளைத்தது போலாகும். "உடல் உயிரான இருவினை அறுத்து என்னை ..... ஒளியாக்கி" எனவும் (அற்புதப்பத்து 8) "ஊன் உயிர்வேறுசெய்தான்" (சுந்தரர்) எனவும் வரும் திருவாக்குகளையும் நோக்குக. ஆதலால் இரண்டு இல்லாமல் விளைந்தது ஒன்றில்லை, இரண்டும் கூடும் நிறையால் நிறைக்கு ஏற்ப ஏற்றம் இறக்கம் விளங்கி முன்னிலை தன்னிலைகள் வேறு வேறாய்ச் சுட்டுணர்வுக்கு இடமாயிற்று. இரண்டும் சமமாக நிறையோடு தழுவி நிகழும் விதம் அற்று அத்து விதமாகும், ஒன்றாய் நின்றிடும் என்பது முடிவாகும். "ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என் உள்ளமும் போய் நான் கெட்ட வா" (திருத்தெள்ளேணம் 18) "ஒக்க அடைக்கும் போது உணரமாட்டேன்" (அப்பர் தேவாரம், திருப்புகலூர் திருத்தாண்டகம்) "ஒன்பது வாசலும் ஒக்க அடைத்தக்கால், அன்பதில் ஒன்றாம் அரன்" (ஔவை குறள், வீட்டு நெறிப்பால்) எனவருந் திருவாக்குகளாலும் இவ்வுண்மையை உணர்ந்து கொள்க.

ஆதலால் தூலம் சூக்குமமாய் அருளாய் மாறிச் சிவாங்கமாதலே தத்துவமசி மகாவாக்கியப் பொருளாகிய உண்மை முத்தியாம் என்பதும் இதுவே **சுத்த சாதகம்,** திருவாசக முதலிய தத்துவப்பெரியார் பாடல்களும் நுதலிய பொருளாம் என்பதும் நன்கு கடைப்பிடிக்க, மேலும் விரிக்கிற் பெருகும்.

இவ்வுண்மை முத்திநிலையைச் சாத்திர நிபுணர்கள் தாம் இயற்றிய நூல்களில் ஒருசிறிதும் கூறவில்லையே எனப்பலர் கருதுகின்றார்கள். அங்ஙனம் கருதுவது அறிஞர்க்கு அழகன்று. அந்நிபுணர்கள் இவ்வுண்மைகளைச் சூத்திரங்களிலும் செய்யுட்களிலும் புகட்டாமல் புகட்டி மறைபொருளாக்கி விட்டார்கள் என்பதே உசிதமாகும். இவ்வித்துவப் பெரியார்கள் தத்துவப்பெரியார் திருவாக்குகளின் பொருளை அறிந்திலரோ எனின், ஒருவாறு அறிந்தும் சிஷ்யர்கள் பக்குவம் நோக்கிச் சமயோசிதமாகப் பொருள் கூறினார் என்பதே உசிதமாகும். என்னை! இக்காலத்தும் இத்தகைய குருபீடங்களைச் சேர்ந்த குரவர் சிலர் தத்துவப்பெரியார் பாடல்களுக்குச் சபையார் குறிப்பறிந்து சமயோசிதமாகப் பொருள் கூறிவிடுதலும் மரபாதலின் என்க. ஆகா! நன்று கூறினாய், குமாரதேவரும் இத்தகைய குருபீடங்களுள் ஒன்றைச் சேர்ந்தவர்தாமே! அவர் இவ்வுண்மைகளை எவ்வாறு அறிந்து கூறினார் என்பார் உளராயின், அவர் அக்குமாரதேவர் தமது வித்தியா சாமர்த்தியத்தினாலும் தற்போதத்தினாலும் **சுத்த சாதகம்** என்னும் இந்நூலைக் கூறினாரல்லர் எனவும்,

பெரியநாயகியே அவர் வாக்கில் நின்று இந்நூலைக் கூறியருளினாள் எனவும், உண்மையை நோக்கி அமைவார் என்பது திண்ணம். குமாரதேவர் அப்பிறப்பில் முத்தியடைந்தாரா? இல்லை, இல்லை. ''இந்த நெறிசொலுமருத்தம் நினக்கும் வாய்த்திடும்'' (**சுத்த சாதகம்** 93ஆம் செய்யுள்) என அம்பிகை அவருக்குக் கூறியருளியதாகச் சொல்லப்பட்டதேயன்றி அவர் முத்தியடைந்தமைக்கு வேறு சான்றுகள் இல்லை.

வேதம் முதலாக உலகில் வழங்கும் நூல்கள் இவ்வுண்மை முத்திநிலை மறை பொருளாகவே நிற்குமாறு ஒருசில கூறிப்போதரவும் இன்னும் பலர் தத்துவமசியைப் பற்றி முற்றும் உணர்ந்தவர்போல வாலியம் வாலியமாக எழுதிப் பிரகடனஞ் செய்து போதரவும், உண்மையை உணர்ந்து தத்துவமசியேயான பெரியார் இவ்வுண்மைகளை எல்லாம் கௌணபதங்கள் அமைந்த செய்யுட்களால் தே ஆரம், திருவாசகம் முதலியனவாகப் பாடிவிட்டு மறைந்தனர். உண்மை உணர்ந்து அது ஆனோர் அது ஆவர். பின் அதுவே அதன் பொருளைச்சொல்லும். இதனால் இப்பெரியார் வாக்கும் சிவவாக்கே ஆதல் அறிக. அவர் கௌண பதங்களால் கூறியமையும் சீவர்கள் பக்கும் நோக்கிய காருண்ணிய மிகுதியேயாம் என அறிக. ''ஓங்காத் துட்பொருளை ஐயன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே'' எனவும் பிறவுமாக மாணிக்கவாசக வள்ளல் கூறியாங்கு, ஓங்காரத்துட்பொருளையும் அதனை அடைதற்கேற்ற சாதக யோகங்களையும் திருப்பெருந்துறை குருநாதனால் உபதேசிக்கப்பட்ட அப்பெருமான் அவற்றையே தாரகமாகக் கொண்டு சாதக யோகங்களாற் படியேற்றம் பெற்றுழி முறையான் எய்திய சிவானுபவக்காட்சிகளே திருவாசகமாக அருளப்பட்டன ஆதலின் அதன் பொருள் எல்லாம் அத்தகைய அநுபவம் வாய்ந்த மெய்யடியாராகிய அந்தணர்க்கேயன்றிச் சாதலடையும் எம்போலிய சூத்திரர்க்குப் புலப்படுதல் அசாத்தியம் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? திருவாசகம் எம்பெருமான் வடிவமாகிய நித்தியவேதாகமசாரமே என்பது ''கற்போலு நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால், நிற்பானைப்போல என் நெஞ்சிலுள்ளே புகுந்தருளி நற்பாற்படுத்து என்னை நாடறியத் தான் இங்ஙன் சொற்பாலது ஆனவா தோணோக்க மாடாமோ'' (திருத்தோணோக்கம் 4) என மணிவாசகர் கூறியருளியதால், அறியப்படும். நித்திய வேதாகமங்களாகிய எழுதா மறைகளை அறிதற்கு நமது தூலம் அமலம் அடைதலாகிய பக்குவம் பெறவேண்டும். வேதாகமங்களையும் அங்கங்களையும் அநுபவத்தில் உணர்ந்த தத்துவப்பெரியார் அவற்றைத் தமது தேவாரம், திருவாசக முதலிய பாடல்களில் குறித்தருளினார். ''பாடி எழுகின்ற வேதாகமங்களும், நாடியினுள்ளாக நான் கண்டவாறே'' (திருமந்திரம் 8ஆம் தந்திரம்-நின்மலாவத்தை-14) எனத் திருமூலர் கூறியதாலும் நித்திய வேதாகமங்களை உணர்ந்து கொள்க. மணிவாசகர் காலத்தில் இருந்த வேதாகம பண்டிதர்களாகிய தில்லை வாழந்தணரே வேதசாரமாகிய அத்திருவாசகப் பொருளை அறியாது மயங்கினர் என்றால் பிற்காலத்தவர் பலர் அதனை அறியாது மனோதர்மத்தாற் பலகொள்கைகளை நாட்டிவிட்டமை வியப்பன்றே! ''மார்கழி நீராடல்'', ''திருப்பொற்சுண்ணம்'', ''திருப்பூவல்லி'' முதலியன எல்லாம் ஒவ்வோர் சிவானுபவக்காட்சிகளைக் குறிக்கும் பரிபாஷைகள் என்றே பெரியோர் கூறுவர். ''மார்கழி ஏற்றமதாமே'' (தியானம் 17) எனத்திருமூலரும் கூறினர்.

திருவாசகத்தையும் அதனை அருளிய குருநாதனையும் பூசித்தற்கு நாம் ஒருகால் அதிகாரிகளாயினும் அதனை ஓதிப் பயனடைதற்கு அதிகாரிகள் ஆதல் அசாத்தியமேயாகும்.

''சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து'' (சிவபுராணம்)

என்பதனாலும் திருவாசகப் பொருளுணர்ந்தார் தூலத்தோடு மறைந்து உண்மை முத்தியடைதல் திருவருளாணையாதல் தெற்றென உணர்க. (சிவபுரம் கைலை என்பன முத்தியைக் குறிக்கும் கௌண பதங்களாகும்) ''மதுரவாசகம் ஓதன் முத்தி உறுபயன்'' எனவும், ''தானே முத்தி தருகுவன் சிவன் அவன், அடியன் வாத வூரனைக் கடிவின் மனத்தாற் கட்ட வல்லார்க்கே'' (நால்வர் நான்மணி மாலை) எனவும் வருவனவற்றாலும் திருவாசகப் பெருமையும், உண்மை முத்தி அடைந்தோரை வழிபடுதல் சிவவழிபாடே ஆதலும் தெற்றென உணர்க. அறுபான் மும்மை நாயன்மார் போலவே, சேந்தனாரும், முத்துத்தாண்டவப் பெருமானும் வழிபடப்படுதல் அவசியமே யாகும். இறந்தோரை வழிபடுதல்

அவவழிபாடேயாதலின் முத்தியடைந்த தத்துவப்பெரியாரே வழிபடற்பாலர் என அறிக. சமயத்தால் அடையும் பெரும் பேறாகிய உண்மை முத்திநிலையைக்குறித்து இயன்றவரை ஆராய்ந்து எழுதப்பட்ட இக்கட்டுரையைச் சைவாபிமானிகளாகிய தமிழ் அறிஞர்கள் தங்கள் தங்கள் அகத்திற்குடி கொண்டிருக்கும் சந்தானகுரவர் முதலிய நாமரூபங்களைப் பற்றிய அபிமானத்தால் புறக்கணித்து விடுவது நீதியாகாது. உமாபதி சிவாசாரியர் பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்தி கொடுத்துத் தாமும் சரீரத்தை விட்டு முத்தியடையவில்லையா? எனப்பலர் ஐயமடைகின்றனர். பெற்றான் சாம்பானும் முள்ளிச் செடியும் அருட்சோதி வடிவாய் உண்மை முத்தி பெற்றது உண்மையே. இத்தகைய உண்மை முத்தி பலர்காண நிகழவேண்டியதே திருவருள் நியமமாதலாலும், எம்பெருமானால் ஆவேசிக்கப்பட்டு நிற்றற்கு உமாபதிசிவம் மிக்க புண்ணியமுடையராய் இருந்தமையாலும் அவ்வுமாபதி சிவாசாரியார் முன்னிலையில் இம்முத்தி நிகழவேண்டுவதாயிற்று என்பதே உண்மையாகும். எம்பெருமான் ஆவேசித்து நிற்றற்குரிய அவ்வளவு புண்ணியம் உமாபதிசிவத்துக்கு இருந்ததேயன்றி அவர் அப்பிறப்பில் அம்முத்தியை அடைவதற்கும் இதற்குரிய **சாதக**யோகங்களைத் தெரிந்து அநுட்டித்தற்கும் பக்குவமும் உடையராயினாரல்லர். இவற்றை அறிந்தாராயின் தாமியற்றிய நூல்கள் ஒன்றிலாவது இவற்றைக் குறித்திருப்பாரன்றோ? ''முத்தி கொடுக்க முறை'' என்ற பாசுரத்தாலும்; அதனை அடையப்பெற்றோர் சோதியாய் மாறியதாலும் தூலத்தோடு மறைதலே முத்தி என்பது நன்கு பெறப்படவில்லையா? ஆண்டு நிகழ்ந்தனவெல்லாம் ஆவேசமாய் எம்பெருமானால் நிகழ்ந்தனவேயன்றி உமாபதிசிவாசாரியாரால் நிகழ்ந்தவை அல்ல. ஆவேசிக்கப்பட்டு நின்ற அவ்வளவிற்கே உமாபதி சிவம் புண்ணியசீலர் ஆதலால் அதற்கேற்றவாறு அவரைக் கௌரவப்படுத்திப் போற்றுவதே முறையாகுமன்றி அவருக்குமுற்றாக அமையப் பெறாததன்மையை வருவித்து அமைத்து அவரைக்கௌரவப்படுத்தத் துணிதல் மதியின்மையோர் செயலேயன்றி மதியுடையோர் செயலன்று. ''ஆட்பாலவர்க்கருளும்....... கிளக்கவேண்டா'' என்றவாறு எம்பெருமான் பெற்றானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்தி கொடுத்ததற்கு உமாபதிசிவாசாரியார் சரீரம் அவர் புண்ணியத்தால் ஒரு சாட்டாக இருந்ததேயன்றி அச்சரீரம் அப்பிறப்பில் முத்தியடைதற்கேற்றவாறு சாதகயோகங்களால் அமலம் அடையப்பெற்றதன்று. இச்சம்பவத்தை ஒரு போலிச்சாட்டாகக்கொண்டு, புறச்சமயத்தாரும் வியப்படையுமாறு இயற்கைமுறையாக அமைந்துள்ள நமது சைவசமய உண்மை முத்திநிலையை மறுக்கத்துணிதல் அறிவுடையோர்க்கு அழகன்று.

பிறவி வலைப்படுகின்ற சீவர்களுக்குரிய அஞ்ஞான பௌதிக தனுவாகிய மருளுடம்பே பிணமாகப் பூமியில் விடப்படுவதாகும்; சீவன் முத்தர்க்குரிய பிரணவவுடலம் அருளாய்க் கரைந்து அருவமாகும். ஆதலால் பிணமாக விழுந்த மருளுடம்புகளை அருள்வடிவமாகக் கொள்ளுதல் இயற்கை விரோதமாம் என அறிக. மருளுக்கும் அருளுக்கும் இடையீடு மிகப் பெரிதாம் என்பது **சுத்த சாதகத்தில்** கண்டு தெளிக. ஆதலால் பிராரப்த அனுபவத்தால் சாதலடைந்த மருளுடம்பினராகிய உமாபதிசிவாசாரியரையும் மற்றைய சந்தான குரவர் முதலிய வித்துவப் பெரியாரையும் பலவகையாற் புண்ணியசீலர் என்பதேயன்றி அருளுடம்பினராய் முத்தியடைந்தார் எனக்கொள்ளுதல் இயற்கை விரோதமும் பாதகமுமாம் என அறிக.

இதுகாறும் கூறியவைகளால் தூலத்தோடு மறைதலே உண்மைமுத்தி என்பதும் அதுவே **சுத்த சாதகமும்** தத்துவப்பெரியார் பாடல்களாகிய திருவாசக முதலியனவும் நுதலிய பொருளாம் என்பதும், தூலம் பழுதடைந்து பிணமாக விழ இறத்தல் பிறவி நெறியே என்பதும் ஒருவாறு விளக்கப்பட்டன. இன்னும் இவ்வுண்மைகள் எல்லாம் **சுத்தசாதகத்தில்** நன்கு விளக்கப்பட்டிருத்தலின் அந்நூலில் கண்டு தெளிக. **சுத்த சாதக**ப்பொருளை நன்குணர்ந்தவர், தத்துவப்பெரியார் பாடல்களில் மறைபொருள்களையும் ஒருவாற்றான் அறிந்து கொள்ளுதற்கு அருகராவர் சுபம்.

சைவம் தழைக.

ஓம்.
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி**

## இராமலிங்க அடிகள் விளக்கியருளிய

# உண்மை முத்தி நிலை

முத்தி என்னும் வடசொல் விடுதலை என்னும் பொருளுடையது. இச்சொல் முத்தி என்றும், வீடு என்றும், மோட்சம் என்றும் வழங்கும். பொதுவாக ஆன்மா உலகியல் பந்தங்களிலிருந்து விடுபட்டு ஆண்டவனைச் சேர்வதை வீடு பேறு எனவும் முத்தி அடைதல் எனவும் கூறுவர். ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களிற்பட்டு உழலும் ஆன்மா இவற்றின் பிடிப்பிலிருந்து விடுபடுவதையே வீடு என்று கருதுவாரும் உளர்.

சாதாரணமாக ஒருவன் உடம்பு நோவாமல், உளம் அடக்காமல் வளர்கிறான். ஓவாது உண்டு, படுத்து, உறங்கி எழுகிறான். உண்டதே உணவு, கண்டதே காட்சி என்று வாதம் பேசிவருகிறான். அறமென்றும் மறமென்றும் அறியாமலே, விலங்குகளைப்போலப் புலபுலெனப் புதல்வர்களைப் பெற்று வாழ்கிறான். ஒருநாள் இறந்து போகிறான். அவனுக்கு உற்றவர்கள், பற்றின் காரணமாக, ''அவர் ஆண்டவன் அடி சேர்ந்தார்'' என்று கூறுகிறார்கள். மற்றொருவர் இளமை தொட்டு நற்குண நற்செய்கைகள் வாய்க்கப்பெற்றார். ஏனைய உயிர்களிடம் ஏதோ சற்று அன்புடையவர். ஆனால் அவை எல்லாம் தமக்கென்றே எண்ணுபவர்; நல்லறிவு விளங்கிய சான்றோரானார்; பெரும் பொருள் ஈட்டினார்; இல்லற நல்லறம் இனிதுற நடத்தினார்; பேரும் பெருமையும் பெற்றார். கற்றதனாலாய பயன்பற்றிய சிந்தனை அவருக்கு இல்லை. மங்கலமனைமாட்சியின் நன்மை பெற்று வாழ்ந்தார். திடீரென்று புண்ணுடம்பை விடுத்து இறந்து போனார். இவர் ''இயற்கை எய்தினார்'' என்றும் ''நல்லவராக வாழ்ந்தார்; ஆதலின் கடவுள் இவரைச் சீக்கிரம் தம்மிடம் அழைத்துக்கொண்டார்'' என்றும் சொல்கிறார்கள். இளமையில் கற்று, கேட்டு, தெளிந்தார் இன்னொருவர். இறையன்பும், உயிரிரக்கமும் உடையவர். இறைவனைப் பற்றியும், உயிரைப் பற்றியும் உயிரைப் பிணித்து நிற்கும் பாசங்களைப் பற்றியும் ஓரளவிற்கு உள்ளவாறு அறிந்து கொண்டார். பாசங்களிடமிருந்து தம்மைச் சிறிது விடுவித்துக்கொண்டார். தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை விசாரித்துத் தெளிந்து, தம்முயிரை இறைவனிடம் அடிக்கடி அண்டவைப்பார். நலம் பல பெற்று மனைவி மக்களுடன் நன்கு வாழ்ந்து வந்தார். பின்னர் உள்ளத்துறவு பூண்டு எல்லார்க்கும் நல்லவராய், எளிமையும், இனிமையும் பூண்டவராய் இறைவனைப் பணிந்து பாடிப் பரவிவந்தார். காலத்தை வெல்லும் வல்லபம் வரவில்லை. தத்துவங்களைத் தம்வசமாக நடத்தும் உளவு தெரியவில்லை. சிரத்தில் சீவித்திருக்கும் திறந்தெரிந்து கொள்ளவில்லை. ஒரு நாள் இறந்து போனார். சாதுவாக வாழ்ந்த அவரது பிணத்தை புதைத்து சமாதியடைந்துவிட்டார் என்கின்றனர்.

இம் மூவகைப்பட்ட மக்களில் முத்தியடைந்தவர் யார்? எல்லாரும் மண்ணிற் கலந்து மண்ணாயினர். அன்றி முத்தியடைந்தார், சிவனடி சேர்ந்தார், வைகுண்ட பதவி எய்தினார் என்றெல்லாங் கூறுவது எங்ஙனம்?

ஆகவே, இறந்தொழிவார் அவ்வளவு பேரும் உண்மையான முத்தியை அடைந்தவரல்லர். அவரெல்லாம் திரும்பவும் பிறக்க வேண்டியவர்கள். மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார் முதலிய தவப் பெரியோர்கள் தமது வாழ்வின் இறுதியில் உடம்போடு சோதியிற் கலந்தனர். அவர்கள் மரணமடையவில்லை. அவர்களே மரணத்தை வென்றவர்கள்; மரணத்தைத் தடுத்துக் கொள்ளும் அளவிற்கு அவர்கள் திருவருளைப் பெற்றனர். திருவருட்டுணைக்கொண்டு தம்முடம்பை ஒளி உடம்பாக்கி ஆண்டவனை அடைந்தனர். அப்பெரியோர்களே உண்மை முத்திநிலை அடைந்தவர்கள் என்றெல்லாம் தவத்திரு.பொ.கந்தையாப்பிள்ளையவர்கள் மிக அருமையான இவ்வாராய்ச்சிக் கட்டுரை எழுதினார்கள்.

கடந்த பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ''மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்'' என்று வாய்ப்பறை ஆர்த்து முழங்கினார்கள் **சிதம்பரம் இராமலிங்கஅடிகள்.** அங்ஙனமே தமதுடம்பைச் சுத்தப்பிரணவ ஞான தேகமாக மாற்றி வாழ்ந்து காட்டி, சிவமாகிச் சிவானுபவச் செல்வருமானார்கள். கண்ணுக்குப் புலனாகாத வானம் போன்ற ஞான உடலில் நின்று சிவ வடிவிற் கலந்தனர். நாமெல்லாம் அந்த ஒப்பற்ற ஆன்ம இன்ப சுகத்தைப் பெறுவதற்குத் தனி மறை ஒன்றும் படைத்தார்கள். இதுவே திருவருட்பா என்னும் பெறலரும் கருவூலம். இந்த ஒப்பற்ற திரு நூலிலிருந்து ஒரு அடி கூட ஆதாரங் காட்டாமல் தமது கட்டுரையை நன்கு முடித்துள்ளனர் பிள்ளையவர்கள். உண்மை முத்தி நிலையை உண்மையாக உணர்வதற்குத் திருவருட்பாத் திருமுறைகள் பெருந்துணை செய்கின்றன. சாகாக்கல்வியை நிலை நாட்டுவதற்குத் திருவருட்பாவைத் தவிர வேறு ஒரு நூல் எந்த நாட்டிலும், எந்த மொழியிலும் இதுகாறும் வெளிப்படவில்லை. ஆதலின் நமது கண்கண்ட தெய்வமாகிய திருவருட்பிரகாச வள்ளலார் திருவடித்துணை கொண்டு அவர்கள் விளக்கியருளிய உண்மை முத்தி நிலையைச் சிறிது ஆய்ந்து காண்போம்.

## முத்திப்பேறு

முதலில் முத்தியைப் பற்றி அறுவகைச் சமயங்களிலும், ஆறந்தங்களிலும் வடித் தெடுக்கப்பட்ட துவைதம், வேதாந்த அத்வைதம், விசிட்டாதுவைதம், சித்தாந்த அத்வைதம் (சுத்தாத்துவைதம்) வீரசைவ சித்தாந்த அத்வைதம் (சிவாத்துவைதம்) முதலிய நிலைகளிலும் முத்தியைப் பற்றிக் கூறும் விளக்கங்களை அறிந்து கொள்ள வேண்டும். பொதுவாக சிவாத்வைதம் தவிர வேறெல்லா நிலைகளிலும் முத்தி நிலையில் உடம்பு கழன்று இறந் தொழியும் உயிர் (சீவான்மா) மட்டும் பிரிந்து போய் இறைவனை (பரமான்மாவை) அடைந்து முத்தி பெறும் என்ற கொள்கைதான் காணப்படுகின்றது. வேதாந்த சித்தாந்த நூல்கள், ஆன்மா முத்தி பெறுவதற்கான நான்கு மார்க்கங்களை வகுத்துரைக்கின்றன. ஒவ்வொரு மார்க்கத்தில் கையாளப்படும் நெறிமுறையும் அந்தந்த மார்க்கங் கொண்டு செலுத்தும் முத்தி நிலையும் கீழ்க்காணும் அட்டவணை குறிப்பிடும்.

| | | |
|---|---|---|
| தாசமார்க்கம் | சரியை | சாலோகம் |
| சற்புத்திரமார்க்கம் | கிரியை | சாமீபம் |
| சகமார்க்கம் | யோகம் | சாரூபம் |
| சன்மார்க்கம் | ஞானம் | சாயுச்சியம் |

இம்முத்திப் பேறுகள், ஒருவன் கைக்கொள்ளும் துவைதம், விசிட்டாத் துவைதம், அத்வைதம் ஆகிய கோட்பாடுகளுக்கு ஏற்ப அமைகின்றன என்பர். துவைதக் கொள்கையின்படி உடலை விட்டுப் பிரிந்து முத்தியடையும் சீவன் தான் வழிபட்டு வந்த தெய்வ உலகிற்குச் செல்லும். அப்போது அது **சாலோகப்** பேறு பெறும். ஒருவர் மனையிற்பணி செய்யும் அகத்தொண்டர்க்குள்ள உரிமையைப் போல ஆன்மா, தான் சேர்ந்த உலகில் போகங்களை நுகர்ந்திருக்கும். மேலும் தான் சென்றடைந்த தெய்வ உலகில் தெய்வத்தின் அருகில் சென்றமரும். அப்போது அச்சீவனுக்குச் **சாமீபம்** என்ற முத்தி கிடைக்கும். அச்சீவன் மீண்டும் பிறப்பதில்லை. மைந்தர்க்குள்ள உரிமையுடன் தெய்வத்திற்குப் பணிவிடை செய்து கொண்டு அருகிலிருந்து பேரானந்தம் அடையுமென்பர்.

விசிட்டாத்துவைதக் கொள்கையின்படி உடலை விட்டுப் பிரிந்து முத்தியடையும் சீவான்மா, பரம்பொருளைச் சார்ந்தும், பரம்பொருளினின்று வேறுபடாமலும் கடலில் அலைபோலக் கூடியிருக்கிற அத்துவிதமாய்ப் பரமான்மாவின் உருவத்தைப் பெற்றுப் பரமபதத்தில் இருக்கும். இந்த முத்தி நிலைக்குச் **சாரூபம்** என்று பெயர். தோழர்க்குரிய உரிமை போலத்தான் அடைந்த புவன பதிகளோடு ஒத்த உருவமும், அணிகலனும், போகநுகர்ச்சியும் பெறுமென்பர்.

கடைசியாக அத்வைதக் கொள்கையின்படி உடலை விட்டுப் பிரிந்த சீவான்மா தான் கற்பித்துக் கொண்ட சீவபோதத்தைக் கலைத்து விட்டுத் தன்மயமாக இருக்கும்போது தனது சச்சிதானந்த சொரூபம் பரம் பொருளின் அகண்ட சச்சிதானந்த சொரூபத்திற் கலக்கச் **சாயுச்சிய** முத்தியை அடையும் என்பர். ஒத்த வடிவினராய் வாழ்தல் மட்டுமின்றி அவ்வப்புவனபதிகளால் அதிட்டிக்கப்பட்டு அவ்வவ்வதிகாரங்களை அவ்வவர்போலவே செய்து கொண்டு வாழ்தல் சாயுச்சிய முத்திப்பயன் என்றும் கூறுவர். இந்நான்கு வகையான முத்திகளிலும் சரியை, கிரியை, யோகம், ஞானமிவற்றால் வல்லபத்தைப் பெற்ற சீவனும் இறந்து போவதுதான் கற்பிக்கப்படுகின்றது. தூலத்தை விட்டுப் பிரிந்த சீவான்மா பின்னர் முத்தியடையும் என்று சாதிப்பர். அதிலும் இவற்றிற்கு எல்லாம் ஞானமே மூலமெனவும் சாயுச்சியமே முடிவான முத்தியெனவும் வலியுறுத்துவர்.

வேதாகம சமயமத சாத்திரங்களில் **சீவன் முத்தி** என்ற மற்றொரு முத்தி நிலையும் பேசப்படுகின்றது. அஃதாவது உலகத்தளைகளில் கட்டுப்பட்டிருப்பவன் சீவன். விடுபட்டவன் முத்தன். சீவன் முத்தன் உடற் கூற்றில் கட்டுப்பட்டவன் போலக் காட்சியளிப்பன். உண்மையில் பாசவேர் அறுத்திருப்பான். ஆனால் இவனும் ஒரு நாள் செத்தே போவான். இவனும்தான் கைக்கொண்ட கொள்கைப்படி மேற்குறித்த முத்தியடைவான் போலும்! சிலர் சீவன் முத்தன் விதேகமுத்தி அடைவான் என்பர். அஃதாவது வினை ஓய்ந்தபிறகு அவன் உடல் தானே கழன்று விடும். அவனுக்குத் தனது உடல் போவது கூடத் தெரியாது. அவனது சீவான்மா விதேக முத்தியை (உடல் கழலும் முத்தியை) ப்பெறுமென்பர். உடல் கழல்வது என்றால் இறந்து ஒழிதல் அன்றி வேறு முத்திப்பேறு ஒன்று இருப்பதாகவே தெரியவில்லை. எனினும் இதனைக் கைவல்ய முத்தி என்றும் கூறுவர்.

தாயுமான அடிகள் இவற்றை அடியோடு மறுக்கிறார்கள்.

> ‘‘உலகவர் போல் சடலம் ஓய, உயிர் முத்தி
> இலகுமெனல் பந்த வியல்பே பராபரமே’’

‘‘எல்லாரையும் போல உடல் ஓய்ந்து விழுந்து பிணமானபின், அவ்வுடலைப் பிரிந்த உயிர் தனித்துச் சென்று முத்தியடையும் என்று கூறுவது பந்தங்களின் இயல்புதானே’’ என்று வினவுகின்றார். இக்கருத்து முன்னரே எடுத்தாளப்பட்டுள்ளது.

இதனை ஏற்றுக் கொள்ளாதவர்கள் ‘‘இந்தத்தேகம் சடந்தானே; இது விழுந்தே தீரும். இத்தேகத்தில் பக்குவப்பட்ட ஆன்மா இத்தேகம் நழுவும் போது இதை விடுத்துச் சூக்கும தேகத்தில் நின்று முத்தியடையும்’’ என்று வாதிப்பர்.

நாமெல்லாம் ஐந்து அவத்தைகட்கு உட்பட்டு வருகிறோம். அவை நனவு (சாக்கிரம்) கனவு (சொப்பனம்) சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப்படும். ஒவ்வொரு அவத்தையிலும் உயிர் நம்முடலில் ஒவ்வோர் இடத்தில் ஊன்றி நிற்கும். உயிர் பதினான்கு தத்துவக் கருவிகளுடன் கூடிப் புருவமத்தியில் நிற்கும்போது நமது தூலதேகம் (உரு உடம்பு) தொழிற்படும் என்பர் திருமூலர். இந்நிலை சாக்கிரம் (நனவு) எனப்படும். கனவு (சொப்பனம்) நிலையில் நான்கு கரணங்களுடன் கண்டத்தில் உயிர் நிற்கும். அப்போது உடல் சூக்கும தேகம் (அரு உடம்பு) எனப்படும். சுழுத்தி அவத்தையில் உயிர் இரண்டு கரணங்களுடன் (மனம், புத்தி) இதயத்தில் நிற்கும் போது உடல் புரியட்டக தேகம் என்றும் கரு உடம்பு என்றும் கூறப்படும்.

துரிய நிலையில் உயிர் உந்தியில் நிற்குமெனவும் உடல் கஞ்சுக உடம்பு அதாவது நுண்ணுடம்பு ஆகுமெனவும் கூறுவர். துரியாதீத நிலையில் உயிர் காரண உடம்பில் மூலாதாரத்தில் நிற்குமென்பர். இப்படியாகப் புருவ நடுவிலிருந்து மூலாதாரம் வரைகீழே இறங்குவதும் பின்பு படிப்படியாக மேலேறிப் புருவ நடுவிற்கு வருவதும் ஆன்மாவின் இயக்கமாகும்.

மேலே கூறப்பட்ட தூலம், சூக்குமம், கஞ்சுகம் காரணம் ஆகிய இவ்வுடம்புகள் எல்லாம் அவத்தைகளுக்கு ஏற்ப நமது உடம்பு அவ்வப்போது பெற்றுக்கொண்ட பெயர்களேயன்றி வேறு உடம்புகள் அல்ல. உயிரும் நம்முயிர் அன்றி வேறொரு உயிரன்று. ஆதலால் விதேக முத்தியாயினுஞ்சரி; கைவல்யமுத்தியாயினுஞ்சரி; பரமுத்தியாயினுஞ்சரி எல்லா முத்திகளிலும் உடம்பு பிணமாகிய பிறகு உயிர் முத்திசேரும் என்பதே பெறப்படும். ஆதலின் இம்முத்திகள் எவையும் உண்மை முத்தி நிலைகள் ஆகா.

இது கருதியே மணிவாசகர்

"மண்மேல் யாக்கை விழுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ
அடிமைசால அழகுடைத்தே!"

என்பாராயினர்.

சிலர் பரமுத்தி நிலையில் தூலத்தை விட்ட ஆன்மா, சூட்சும தேகம், காரண தேகம் போல்வதோர் உடம்புடன் சிவனடி சேரும் என்று சாதிப்பர். பிறவிக்கு ஏதுவாகா நிலையில் மலம் நசித்துப் போனால் ஆன்மா தூலத்தை விட்டுப் பிரியாது. பிரிந்தது என்றால் அத் தூலத்தைப் பிணம் என்று தானே சொல்லவேண்டும்.

"சூக்குமந்தனது காரணமடையத் தூலமிங்ககன்றதே யென்றால்
சூக்குமந்தனது காரணம் விடுத்துத் தூலமொன்றெடுத்த தென்றுணர்வாய்"

என்று சுத்த சாதகம் (20) கூறுவது போலத் தூலம் விழுமானால் ஆன்மா வேறு பிறவியை எடுத்தே தீரும்.

"மேலொரு வடிவை எடுத்ததே யாகில் மேவுமிவ்வுடல் லிங்கே
மேலொரு வடிவை எடுத்ததின்றாகில் மேவுமிவ்வுடல் வீழும் இங்கே வீழா"

என்று சுத்தசாதகம் 19 அறுதியிட்டுரைப்பது காண்க.

அன்றி, தூலம் கழலாமல் திருவருட்டுணையால் சூட்சுமம், காரணம் போன்ற தேகங்களாக **மாறுமாயின்** அவை சுத்தப் பிரணவதேக மெனப்படும். அத்தேகங்கள் தோற்றத்தில் தூலத்தினின்று வேறுபடாமல் "வெந்துறு புரிபோல்" காட்சி தரும். அசுத்த பூதகாரிய அணுக்களால் ஆகிய அசுத்த தூல தேகம் சுத்த பூதகாரிய அணுக்களால் ஆகிய சுத்த தேகமாக மாறி இருக்கும். பரம முத்தியின் கண் அத்தேகம் வெளியாய் விமல நல்லருளதாய் சிவத்திற்கு அங்கமாகிவிடும் என்பர் சிவாத்துவித சுத்த சித்தாந்திகள்.

கிரம முத்தி என்று இன்னுமொரு முத்தியும் கற்பிக்கப்படுகின்றது. சீவான்மா முற்றிலும் வெற்றி கண்டு பிரம பதவியைப் பெறும். பிறகு மகாபிரளய காலத்தில் கிரம முத்தியடையும். உலகம் அனைத்தையும் தன்மயமாகவும், தன்னை அனைத்துலக மயமாகவும் பார்க்கும். சத்தியலோகம் முதலிய மேலான உலகங்களில் தவம் புரிந்து, அண்டங்கள் மூலப்பிரகிருதியில் ஒடுங்கும் போது ஆன்மா **பிரகிருதிலயம்** அடையும் என்பர். இந்த முத்தியிலும் பிரம பதவியைப் பெறுகின்ற சீவான்மா உடலை மண்ணுலகில் விட்டுத்தான் போக வேண்டும். ஆதலின் இதுவும் உண்மை முத்தி நிலையன்று.

பௌத்த மதத்தில் சீவான்மா முத்தி அடைய வேண்டும். அதற்குப் பரிநிருவாணம் என்று பெயர். விறகு எரிந்தானபின் தீ தானே அணைவது போல வினை ஓய்ந்தபின், சீவான்மா பரிநிருவாணம் அடையும் எனவும், தீ என்னவாயிற்று என்று யாரும் சொல்லமுடியாது எனவும் கூறுகின்றனர்.

சங்கற்ப நிராகரணமும், சிவஞான முனிவரும் சிவசமவாதம் போன்ற பல்வேறு சமயமத முடிபுகளை மறுக்கின்றனர். எனினும், இவர்கள் சித்தாதஞ் செய்கின்ற முத்திநிலைகளில் எல்லாம் உடல் நழுவுதலே கற்பிக்கப்படுகின்றது.

இதுவன்றி, முன்னர்க்கூறிய நால்வகை மார்க்கங்களை நமது சமய குரவர்களாகிய தத்துவப்பெரியோர்கள் கைக்கொண்டனர் என்று உபசாரமாக சொல்வதுண்டு. ஆனால் அவர்கள் அந்தந்த மார்க்கங்கள் கொண்டு செல்வதாகக் கருதப்படுகின்ற முத்திப் பேறுதான் பெற்றோர்கள் என்று சொல்வதற்கில்லை. ஒருவாறு தாச மார்க்கத்தில் நின்ற திருநாவுக்கரசர் ஞானத்திற் சரியையைக் கைக்கொண்டு திருவாலங்காட்டில் ஆண்டவனைப் பாடிப்பாடி உருவருவாகிய இலிங்கத்தைத் தழுவி நின்று முதிர்ந்து மெலிந்த தமது உடம்புடன் சோதியிற் கலந்தனர். உடல் குளிர, உயிர்தளிர்ப்ப, ‘‘ஆடுகின்ற சேவடிக்கீழ் ஆடுகின்ற அரச’’ ரானார் இதுவே உண்மையான முத்திப்பேறு.

மூன்று வயதில் ‘‘போதமார் பொற்கிண்ணத்து’’ ஞானப்பால் மகிழ்ந்துண்டு ஞானத்திற் கிரியை சேரச் சற்புத்திர மார்க்கத்தில் நின்றார் ஞானசம்பந்தர். ஆச்சாள் புரத்தில் தம் தந்தை சிவபாத இருதயர், திருநீலநக்கர், திருமுருகர் முதலிய பெரியோர்களும், திருமணங் காணவந்தார் அனைவருமாகத் தம்மனைவியுடன் சோதியுட் கலந்தனர். இவர்கள் பெற்றதே உண்மையான முத்தியாகும். இதனைக் ‘‘கண்ணுதலார் திருமேனியுடன் கூடி’’க் கலந்தனர் என்ப.

ஞானத்தின் யோக நிலை நின்று சகமார்க்கம் பற்றிய சுந்தரர் திருவஞ்சைக்களத்தில் ‘‘வீரவெண்களிறு உதைத்து’’ சேரமான் பெருமாள் நாயனாருடன் ஆண்டவனை அடைந்து உண்மை முத்தி எய்தினார். ஞானத்தில் ஞானமெனும் பரஞானம் பற்றி நின்று சன்மார்க்கம் என்னும் நன்மார்க்கம் கைக்கொண்ட மாணிக்கவாசகர் தில்லையம்பதியிலே திருச்சிற்றம்பலத்தில் சோதியுருவில் வெளிப்பட்ட ஆண்டவனுடன் கலந்தனர். ‘‘மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த வெளியாக்கிக் கலந்து கொண்ட வெளியே’’ என்று திருஅருட்பிரகாச வள்ளலும் ஆண்டவனைப் பாடியருளினார். மேலும் ‘‘வான் கலந்த மாணிக்கவாசக’’ என்று போற்றுகின்றார். இதுவே வான்வடிவாகுதல் என்னும் உண்மை முத்தி நிலை. மணிவாசகர் இதனைப் படிப்படியாகப் பெற்றனர் என்று கூறுவதுங் காண்க.

> ‘‘மண்புருவ நடுமுதலா மனம் புதைத்து நெடுங்காலம்
> என்புருவாய்த் தவஞ் செய்வார் எல்லாரும் ஏமாக்க
> அன்புருவம் பெற்றதன்பின் அருளுருவம் அடைந்து பின்னர்
> இன்புருவம் ஆயினைநீ எழில்வாத வூர்இறையே’’

**திருஅருட்பா IV : 12 : 3**

திருவரங்கப் பெருமானையே மணங்கொள்வேன் என்று உறுதி கொண்டாள் ஆண்டாள். அந்தச் சூடிக் கொடுத்த நாச்சியாரைத் திருவரங்கம் கொண்டு சேர்த்தனர். அங்கு அறிதுயில் கொள்ளும் ஆண்டவன் தன்னருள் வடிவாம் சோதிப்பிழம்பாகத் தோன்றினான். அதனில் கலந்து மணங்கொண்டாள் ஆண்டாளம்மை. இதுவே உண்மை முத்திப்பேறு.

இத்தகைய உண்மை முத்தி நிலையை அறுபத்து மூவரில் பலர் பெற்றனர். இத்துணையும் அறிந்த சிவஞான முனிவர், சைவ சமயாச்சாரியர்களாகிய வித்துவப் பெரியோர்கள் விரித்துரைக்கும் சைவ சித்தாந்தத்தை விளக்கும்போதெல்லாம் உடல் கழலும் பரமுத்திப்பேறு ஒன்றனையே வற்புறுத்திக் கூறுகின்றார். முற்ற முடிந்த முத்திப்பேறு பரமுத்தியேயாம் எனவும், அதுவே ஆன்ம லாபமெனப்படும். சாயுச்சிய முத்தி எனவும் அன்பு, பத்தி என்பன இச்சை மீதூர் பொருளவாதலின் அது பரமுத்தியிலும் உண்டெனவும்

பரமுத்தியில் இச்சை நிகழாத வழி சிவபோகம் அனுபவமாதல் செல்லாதெனவும் ''சிவஞானம் பெற்ற வழியும், சிவம் பிரகாசித்த வழியும், சீவன் முத்தராய வழியும் ஆணவமலம் அப்படியே கெடாது தனது சத்திகெட்டு வாதனை மாத்திரையாய் உடம்பு உள்ள அளவு நின்று, மற்றொரு பிறவிக்கு ஏதுவாதலின்றி அதனோடு கழிந்தொழியும்'' எனவும், சரீரத்தோடு கூடியிருக்கும் முத்தியைச் சாலோகாதி ஆகிய பதமுத்தி என்று நல்லோர் சொல்வர் எனவும், சித்தாந்தங் கற்பிக்கின்றார். இவ்வகையான பரமுத்தியின் பயன், ஆன்மா மீண்டும் ஒரு உடலை எடுத்துப் பிறக்காது என்றும், பிறவித் துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதாகிய முத்தியைப் பெற்றுவிட்டது என்றும் கூறுவர். உடல் ஓய உயிர் முத்திசேரும் என்பவர்கள் பந்த வியல்பினர் எனத் தாயுமான அடிகள் ஓதுதலின் மண்கலந்த இவர்கள் கூற்று போலியுரை என விடுக்க.

ஆன்ப லாபம் என்பது உண்மை முத்தி நிலையில் கிடைக்கும் சிவானுபவம். ஆன்ம ஞான சித்தியும், சுத்த ஞான சித்தியும் கைவரப்பெற்ற பெரியோர்கள் சிவத்துவம் அடைந்து புறப்புணர்ச்சியில் சிவானுபவத்தில் திளைத்து நிற்கும்போது தாம் பெற்ற ஒப்பற்ற ஆண்ம இன்ப சுகத்தைப்பற்றி, நம்மனோர்பால் வைத்த இரக்கத்தால் ஒருவாறு உண்மை முத்தி நிலையை விளக்கியருளுகின்றனர். சிவானுபவத்தில் பல படிகளைக் கூறிச் செம்மாப்பர் வள்ளற் பெருமான். அவர்களே உண்மையில் சிவனடி சேர்ந்த சுத்த ஞானிகளின் சித்தி வல்லப தரத்தை வகுத்தறிந்து வாழ்த்த இயலவில்லையே என்று ஏங்குகின்றார்கள். எனினும் தாம் கண்டு கொண்ட சிவரகசியத்தை எல்லாம் வாரி இறைத்துள்ளனர்.

வடலூரில் தருமச்சாலையை அமைத்துரைந்த அந்நாளில் **இராமலிங்க அடிகள்** தம்முடன் இருந்த ஆடூர் சபாபதி குருக்களை நோக்கி ''சுத்த ஞானிக்கு அடையாளம் என்ன?'' என்று வினவினார்கள். விடைகூற முடியாமல் குருக்கள் விழித்தார். உடனே அடிகள் தாம் போர்த்தியிருந்த மேல் வேட்டியைக் களைந்து விட்டுத் தருமச்சாலையின் வெளியில் வந்து வெய்யிலில் நின்றார்கள். வள்ளற் பெருமானுடைய நிழல் விழவில்லை. அதைக்காட்டி ''இதுவே சுத்த ஞானியின் அடையாளம்'' என்று கூறித் தெளிவுபடுத்தினார்கள்.

மற்றொரு சமயம் பெருமான் தருமச்சாலையில் பிரசங்கஞ் செய்து கொண்டிருந்தனர். அதனை அடையாளந் தெரியாத புதுப்புது மனிதர்கள் மிகவும் உருக்கமாகக் கேட்டு அனுபவித்து நின்றனர். இவர்களைக் கண்டு தொழுவூர் வேலாயுத முதலியார் இவர்களை யார் என்று தெரிந்து கொள்ள விரும்பினார். பிரசங்கம் முடியுந்தறுவாயில் சுவாமிகள் சுத்த சித்துருவாகிச் சொல்லற்று இருந்தனர். சிறிது நேரங் கழித்து, அந்நாளில் சிறுவராக இருந்த வீராசாமி ரெட்டியாரைச் சுவாமிகளிடம் அனுப்பி, வந்தவர்கள் யார் என்று கேட்கச் சொன்னார். இதை உணர்ந்த அடிகள் ''ஏன் காணும்! முதலியாரப்பா கேட்கச் சொன்னாரா? முன்புறம் நின்றவர்கள் யோக சித்தர்கள், பின்புறம் நின்றவர்கள் ஞான சித்தர்கள். இவர்கள் எல்லாம் குளிகை மணி கொண்டு ககனமார்க்கமாகச் சென்றனர். சுத்த ஞானியின் சந்நிதானத்தில் அவர் மணிக்கு வல்லபம் இருக்காது. அதனால் அவர்கள் இங்கு வந்து விடைபெற்றுச் சென்றனர்'' என்று கூறிமுடித்தார்கள். ''அவர்கள் இப்போது எங்கே?'' என்று சிறுவர் வினவ, அடிகள், ''இந்நேரம் காசியைத்தாண்டியிருப்பர்'' என்றனர்.

ஆதலின் வள்ளற் பெருமான் கூற்று சுத்த சன்மார்க்க சத்திய ஞான அனுபவ உண்மைகள் மடிந்து மண்கலந்த மற்றையோர் எத்துணைச் செம்பொருள் செப்பினும் அவற்றுள் குறைகள் உள்ளன. அதற்குக் காரணம் அனுபவம் இல்லாமையேயாகும். ஒரே வழி இவர்களது ஒட்பம் கழிய நன்றாயினும் அனுபூதிமான்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்.

**வள்ளற் பெருமான் கூறும் முத்தி**

''முத்திஎன் பதுநிலை முன்னுறு சாதனம்
அத்தக என்றவெள் அருட்பெருஞ்ஜோதி'' **திரு.** VI : 1 : 250

முத்தி என்பது முதலில் கிடைக்கும் சாதனம் என்றும், அதாவது விடுதலை பெறுவதாக ஒரு நிலை என்றும், சித்தி என்பது அந்நிலை சேர்ந்த அனுபவம் என்றும் அங்ஙனம் வரக்கூடிய சித்தியின் பொருட்டாகவே முத்தி பெறுதல் என்றும் வள்ளற் பெருமான் கூறியருளுகின்றார். முத்தியைப் பெற்றேன் எனவும், அம்முத்தியினால் ஞானசித்தியை உற்றேன் எனவும், அதனால்

ஞானசித்தனும் ஆனேன் எனவும் அடிகள் மேலும் விளக்குவாராயினர். மேலும், ஆண்டவனது இன்ப நடங்கண்ட வரை, எல்லாம் செய்யவல்ல ஞானசித்தர் என்று விளக்குகின்றனர். **(திரு. VI : 139 : 89)**

ஞான சித்திகளில் பத்து வகை கூறப்படுகின்றன. கரும ஞான சித்தி, யோக ஞான சித்தி, தத்துவ ஞான சித்தி, ஆன்ம ஞான சித்தி என்னுமிவற்றுள் அடி நிலையும் முடி நிலையும் உள்ளன. இவற்றிற்கப்பால் சுத்த ஞான சித்தி, சமரச சுத்த ஞான சித்தி என்பன கூறப்படும். இச்சித்திகள் அனுபவமாகும் என்றால் அவற்றிற்கேற்ப முத்தி நிலைகளும் உண்டென்பது பெறப்படும். இந்த முத்தி நிலைகளிலெல்லாம், ஆன்மா தூயஉடலைப் பொருந்தி அந்தந்த நிலைக்கேற்ற ஞான அனுபவம் கைவரப்பெற்று இன்புற்றிருக்கும். இந்த ஞான சித்தர்களையே சுவாமிகள் ''கடவுள் இன்பத்தை அனுபவிக்கின்ற முத்தர்கள்'' என்று குறிப்பிடுகின்றார். இம்முத்தர்களும், இம்முத்தி நிலைகட்குரிய வல்லபங்களைப் பெற்ற சித்தர்களும் பேசுகின்ற பேச்செல்லாம், சிற் பொது, பொற் பொது என்பனவற்றை அறிந்து கொண்டு சிரஞ்சீவிகளாக வாழும் சுத்த சன்மார்க்க ஞானிகளைப் பற்றியதாக இருக்கும்.

சிரஞ்சீவி என்ற சொல் சிரத்தில் சீவிப்பவர் என்று பொருள்படும். இவர்கள் இறப்பதில்லை. இராமாயணத்தில் வரும் அனுமன், பாரதத்தில் வரும் அசுவத்தாமன் முதலியோர் சிரஞ்சீவி எனப்படுகின்றனர். இவர்களும் உண்மை முத்தி நிலை பெற்றவர்கள். இவர்கள் இறந்து ஒழிந்ததாக எங்கும் கூறப்படவில்லை. சிரஞ்சீவிகள் எப்பொழுதும் ஆண்டவனைத் தமது புருவமத்தியிலும், அதற்கு மேலும் உள்ள சிற்பொது, பொற்பொதுவில் கண்டு கண்டு களித்து இன்புற்று இருப்பார்கள். இவ்வாறு இறைவனுடைய சிற்சபை நடமும், பொற்சபை நடமும் தமக்குரியனவாக்கிக் கொண்டபோது தேவரும் மூவரும், இவர்களைப் பற்றிப் பேசினர் என்றும், அடிகள் கூறுவர்.

சிற்சபையும் பொற்சபையும் சொந்தமென தாச்சு
தேவர்களும் மூவர்களும் பேசுவதென் பேச்சு **திரு. VI : 168 : 1**

சிற்பொதுவும் பொற்பொதுவும் நானறிய லாச்சு
சித்தர்களும் முத்தர்களும் பேசுவதென் பேச்சு **திரு. VI : 168 : 8**

இந்த முத்தி நிலைகளில் உடம்பு என்னாகும்? நமது அசுத்த பூதகாரிய உடம்பு பிணமாகாமல் சுத்த பூதகாரிய சுத்த உடம்பாக மாறிவிடும் என்று அறியவேண்டும். என்பு உரு பொன்னுருவமாக, அதாவது சுத்த தேகமாக, நித்திய தேகமாக மாறும். நரை, திரை, மூப்பு முதலிய அசுத்தங்கள் நண்ணமாட்டா. மண், நீர், நெருப்பு, காற்று, வான் ஆகிய பூதங்களினால் தாக்குண்ணப்படாது. பசி, தூக்கம், சினம், காமம், வியர்வை, நிழல் முதலிய எவையும் உண்டாகா. இப்படிப்பட்ட சுத்த தேகம் அடுத்தாற்போல் பிரணவ தேகமாக மாறும். அப்போது அதனைக் கண்ணால் காணமுடியுமேயன்றிக் கையால் பிடிபடாததாகிவிடும். இதை ஓமயத் திருவுரு என்றும் அருள் உருவமென்றும் கூறுவர். அடுத்தபடியாக இந்த அருள் உருவம் ஞானதேகமாக, கடவுள் உருவமாக மாறும். இதற்கு வான்வடிவமென்றும், இன்புருவம் என்றும் பெயர். ஆகாயம் போல் கண்ணுக்குப் புலனாகாது இறை வடிவத்திற்கலந்துவிடும். இம்முத்திநிலை வான்கலத்தல் எனவும் கூறப்படும். இதுவே கடவுள் மயமாகுதல் என்னும் முத்திப்பேறு. இப்பேறு பெற்றதோடன்றி மேலுஞ்சென்றனர் அடிகள்.

''மன்னுகின்ற பொன்வடிவு மந்திரமாம் வடிவும்
வான்வடிவும் கொடுத்தெனக்கு மணிமுடியுஞ் சூட்டிப்
பன்னுகின்ற தொழிலைந்துஞ் செய்திடவே பணித்து''
**திரு. VI : 38 : 61**

''சுத்த வடிவும் சுகவடிவாம் ஓங்கார
நித்த வடிவும் நிகழ்ந்தோங்கு-சித்தெனுமோர்
ஞான வடிவுமிங்கே நான்பெற்றேன் எங்கெங்குந்
தானவிளை யாட்டியற்றத் தான். '' **திரு. VI : 109 : 17**

''நானே தவம்புரிந்தேன் நம்பெருமா னல்லருளால்
நானே அருட்சத்தி நாடடைந்தேன்-நானே
அழியா வடிவ மரைமூன்றும் பெற்றேன்
இழியாம லாடுகின்றே னிங்கு''

**திரு. VI : 109 : 27**

என்றெல்லாம் கூறிமகிழ்வது காண்க.

மேலே குறிப்பிட்ட சித்தியனுபவங்களில் அடிநிலை ஆன்மஞானசித்தி கைவரப் பெற்றால் ஆன்ம தரிசனம் கைகூடும் என்றும், முடிநிலை ஆன்மசித்தியின் போது ஆன்மானுபவம் கிட்டுமென்றும் அறிதல் வேண்டும். சுத்த ஞானசித்தியில் தூலம் சுத்த தேகமாகிவிடும் என்று ஒருவாறு கூறலாம். சுத்த தேகமாவதை உருவச்சித்தி எனவும், பிரணவ தேகமாக மாறுவது அருவுருவச் சித்தி எனவும் முடிவில் ஞான தேகமாக மாறுவது அருவச்சித்தி எனவும், இவை தேகமிசைப் பெறுகின்ற சித்திகள் எனவும் கூறப்படும். இம்மூன்று சித்திகளும் மனித தேகத்தைப் பெற்றுக்கொண்ட ஆன்மாக்கள் பெறக்கூடியவை. நினைத்தற்கரிய பெருமையும் கிட்டுதற்கு அருமையும் உடையன. ஆன்மா ஞான உடலுடன் அருவச் சித்தியடைந்து சிவபரம் பொருளுடன் உண்மையில் சிவானுபவம் பெற்றுச் சிவமயமாவதும் இதுவே.

இந்த முத்தி நிலைகளில்தான் தத்துவ மசி, அகம் பிரம்மாஸ்மி, பிரம் மாகம், சிவோகம் என்னும் மகாமந்திரங்களின் உண்மை புலப்படமுடியும். இதனை அறியாதார், ஆன்மா மலம் நசித்த வழி, உடலைவிட்டுப் போய் பரமுத்தியில் சிவனடி சேரும் என்பர். சாகும் பிரம்மங்களாகிய இவர், நாம் பிரம்மம் என்பது தாம்பு பாம்பெனும் நியாயத்தை ஒக்கும் என்பர்.

**மரணமிலாப் பெருவாழ்வு**

இனி அடிகள் மரணமிலாப் பெருவாழ்வாகிய உண்மை முத்தி நிலையை வற்புறுத்துமாறு காண்பாம். அடிகளிடம் ஆண்டவனை நெறியொன்று தந்து, அதனை ஆய்ந்திடுமாறு பணித்தான். அதுவே இறவாப் பெருநெறி; மரணப் பெரும் பிணி வாராப்பெரு நெறி; மரணமிலாப் பெருவாழ்வு; என்றும் இளமையோடிருக்கும் ஒளி நெறி. உலகத்திலுள்ள மக்கள் எல்லாரும் இந்நெறி நின்று ஒழுகி நிலைக்க வேண்டும் என்றழைக்கின்றனர்.

''உலகியல் வாழ்க்கையே வாழ்வாக எண்ணி ஏமாந்து போகாதீர்கள். விரைந்து வாருங்கள். மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம். யான் பொய் சொல்லவில்லை புனைந்துரைக்கவுமில்லை; சத்தியமாகச் சொல்கின்றேன். இது நல்ல தருணம்; எனக்கு ஆண்டவன் அந்த ஒப்பற்ற இறவாப் பெருவாழ்வைத் தந்துள்ளான், நீங்களும் பெற்றுக் கொள்ளலாம், அப்பேரின்ப வாழ்வை வாரிக் கொள்ளலாம். உள்ளெலாம் நிரம்ப உண்ணலாம்; உலகில் ஓங்கலாம். உவந்து இன்பங்கண்டு என்றும் வாழலாம்'' என்றழைப்பாராயினர்.

உடற்கருவி கரணங்கள் பழுதடைவதற்கு முன்னம் மரணத்தைத் தடுத்துக் கொள்ள முயல வேண்டும். காலமுள்ள போதே ஆண்டவனைக் காதல் செய்து உய்மின். மரணம் வந்தால் அதை எட்டி நின்று தடுப்பதற்கு உம்மால் முடியாது. ஆகவே துஞ்சாது வாழ ஆண்டவனருளை நாடுங்கள். அவன் அருள் வல்லபத்தைப் பெற்றாலன்றி மரணத்தைத் தவிர்க்க முடியாது. சிறிதும் நேரத்தை வீணாக்காமல் திருவருளைப் பெற்றுக் கொள்ள முந்துங்கள் என்று எச்சரிக்கை புரிகின்றார்.

''ஐயோ! கூற்று வருங்காலதனுக் கெது புரிவீர்! ஒப்பற்ற பெரும் பதியை நாம் மருவி இறவாத நலம் பெறலாம். இறவாத பெருவரம் நீர் ஏன் அடையமாட்டீர்? வாழ்க்கையில் அலுத்துப் போனவர்களும், உடல் உலுத்துப் போனவர்களும் கூட எமனிடமிருந்து தப்பிவிடலாம். என்னோடு சேர்ந்திடுமின். என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்; மரணத்தைத் தடுத்திடலாம். சன்மார்க்க மொன்றே பிணிமூப்பு மரணஞ் சேராமல் தவிர்த்திடும்.

இத்துணையும் யான் ஏன் சொல்லுகின்றேன்? உம்பால் வைத்த இரக்கத்தால் உரைக்கின்றேன். நான் ஆன்ம இனம். உம்மிடம் எனக்கு நேயமுண்டு. ஆன்ம நேய ஒருமையால் யான் அடைந்த இன்பத்தை நீரடைதல் குறித்துச் சொல்கின்றேன். ஆன்மநேய ஒருமைப் பாட்டு உரிமை எனக்குண்டு. அந்த உரிமையால் வற்புறுத்துகின்றேன். நீர் மடிவது அழகல்ல, உமக்கு பிணி, மூப்பு, மரணத்தில் சம்மதமா? நரை மரண மூப்பறியா நல்ல உடம்பினரே நற்குலத்தார். ஊனேயுமுடல் அழியாது; ஊழிதொறும் ஓங்கும்; அந்த உத்தம சித்தியைப் பெறுவீர்; இது சத்தியம்'' என்று ஆணையிட்டு அழைக்கின்றார்.

''வையகத்தீர், வானகத்தீர், மற்றகத்தீர், நுமது வாழ்க்கையெலாம் ஒரு வாழ்க்கை என மதித்து மயங்காதீர். இந்த உடம்பிற்கு வரும் மரணவாதனையைத் தவிர்த்த வாழ்க்கையே ஒப்பற்ற உயரிய வாழ்க்கையாகும். அதனைப் பெற்றுக்கொள்ள வாருங்கள்'' என்று கூவுகின்றார்.

ஒரு சிலர் இறவாமை பற்றிய பேச்செடுக்காமல் பிறவாமை பற்றிப் பெரிதாகக் கூறிவிட்டனர். தவமுதியோர்களும், தத்துவஞானப் பெரியார்களும் இரண்டையும் இணைத்தே பேசியுள்ளனர். ''மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை'' என்பது தேவாரம் தீராநோய் என்பது இறப்பும் பிறப்பும். ''முந்து பிறவா நிலனுமில்லை பிறந்து இறவா நிலனுமில்லை'' ''இடர்ப்பிற பிறப்பென்னும் கடற்படா வகைகாத்தல் நின்கடனே'' என்றார் பட்டினத்துப் பிள்ளையார். ''மண்ணிலே பிறந்திறந்து மண்ணாவதற்கு ஒருப்படுகின்றேனை அண்ணல் ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயம்'' ''மரணம் பிறப்பிவை இரண்டின் மயக்கறுத்த கருணைக்கடல்'', ''பிறப்போடிறப்பென்னுஞ் சித்தவிகாரக் கலக்கந் தெளிவித்த வித்தகத்தேவர்'' என்பன திருவாசகம். ஆகவே இறப்பையும் பிறப்பையும் ஆண்டவனது அருளைக் கொண்டுதான் தவிர்த்துக் கொள்ள முடியும் என்பதாயிற்று. மேலும் மணிவாசகர் ''யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கு என்கடவேன்'' என்று அரற்றுகின்றார், அடுத்த பிறப்பைப் பற்றி எண்ணி அதுவேண்டாம் என்று வேண்டுவதற்கு முன்னம் எடுத்த பிறப்பிதனில் முயன்று இறவாதிருக்க வேண்டுவதே அறிவிற்குப் பொருத்தமானது.

உலக வழக்கில் இறவாமை பற்றிய ஒரு உண்மை காணப்படுகின்றது. சாதாரணமாக ஒருவர் இறந்து போனால் ''அவர் தவறிவிட்டார்'' என்று சொல்லுகிறோம். அவர் எதிலிருந்து தவறிவிட்டார் என்று நாம் சிந்திப்பதில்லை. இறவா நெறி ஒன்று உண்டு. அதுவே உண்மை முத்திநிலை. அந்த நெறி தவறாது வாழ்ந்தால் மரணம் வராது. தவறிவிட்டால் இறக்க நேரும். ஆகவே ''தவறி விட்டார்'' என்பது இறந்தார் என்பதைக் குறிக்கும்படியான வழக்கம் வந்துவிட்டது.

மக்கட்பிறவி எடுத்தார் எல்லாரும் பொதுவாக இறந்து போகின்றனர். ஆதலின் அதற்குத் தக்கவாறு ஆதியில் விதிகளை அமைத்தனர். அவர்கள் வல்லவர்கள். ''பிறந்தன இறக்கும்'' என்றனர். அதை மாற்றுவாரில்லை. எனினும் எந்த உயிரும் இறந்து போக விரும்புவதில்லை. இறவா நலம்பெறத்தான் விழைகின்றன. இறவாநெறி ஒன்று உண்டு என்று எல்லார்க்கும் தெரியாது. அதனால் பிறவா நெறியைக் கற்பித்தனர். அதில் உடல் சுழலத்தான் செய்யும் என்று கழறினார். பிறந்தன இறக்கும் என்று கூறும் அதே மூச்சிலே ''இறந்தன பிறக்கும்'' என்று அறிதல் வேண்டும். அப்போது இறவாமைக்குப் புதுவழி வகுக்கத் தோன்றும். வள்ளற் பெருமான் ஒருவரே ''பிறவிச் சட்டமுங்கிழித்தேன்'' என்றனர். இறவாமை ஈயும்படி இறைவனை வேண்டி நின்றார்; பாடிப்பரவினார்; ஆடி அலறினார். ஆண்டவனை நினைந்து அடிகள் மருந்தறியேன், மணியறியேன், மந்திர மொன்றறியேன்; மரணம் எனும் கொடும்பாவி வந்திடுமே; என்ன செய்வேன் என்று ஏங்கினார். கருணைக் கடலாகிய அருட் பெருஞ்சோதி ஆனந்தத் தெய்வம், மருந்தும், மணியும் மந்திரமும் ஆகி நின்று அருள்தந்தது.
**(திருஅருட்பா VI : 33 : 7 )**

''நரைதிரை மூப்பவை நண்ணா வகைதரும்
உரைதரு பெருஞ்சீர் உடையநன் மருந்தே''

**திரு. VI : 1 : 1329**

“தாழ்வெலாந் தவிர்த்துச் சகமிசை யழியா
வாழ்வெனக் களித்த வளரொளி மணியே”

**திரு. VI : 1 : 1307**

“கற்பம் பலபல கழியினும் அழியாப்
பொற்புற வளித்த புனித மந்திரமே”

**திரு. VI : 1 : 1313**

“அருள் பாவித்து, மரணந்தவிர்த்து, இன்பம் நிறைவித்து ஆண்டு கொண்டான். என்னையும் நின்னையும் ஓருருவாக்கி, யான் உன்னிய படியெலாம் சீர் உறச்செய்து உயிர்த்திறம் பெற அழியா அருளமுதளித்தனை, அருள் நிலை ஏற்றினை அருள் அறிவளித்தனை அருட்பெருஞ்சோதி” **(திரு.VI: 1: 1570-74)** என்று கசித்துருகிப் பாடுகின்றார். இதுவே உண்மை முத்தி நிலை.

அப்படியானால் யாம் மரணத்தை தடுக்குமாறு யாங்ஙனம்? ஆண்டவனுடைய திருவருளைக்கொண்டு தான் மரணத்தை வெல்லலாம். திருவருளை எப்படிப் பெறுவது? அதற்கு யாம் என்ன செய்ய வேண்டும் என்பதையும் அடிகள் விளக்குகின்றனர்.

“நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழந்து நெகிழ்ந் தன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழுங்கண்
ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே
நன்னிதியே ஞான
நடத்தரசே யென்னுரிமை
நாயகனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்
வம்மின்உல கியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன்
சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற்
புகுந்தருண மிதுவே”

**திரு. VI : 110 : 1**

இந்த ஞான சரியை ஆகிய நெறியைக் கைக்கொண்டபோது ஆண்டவன் தமக்கு மரண சுவை தவிர்க்கும் கற்பங் கொடுத்தருளினான் என்பர். நினைத்தலும், உணர்தலும், நெகிழ்தலும் அன்பே நிறைதலும் கரணங்களின் காரியங்கள். இவை ஒன்றிற்கொன்று தொடர்புடையன. அத்துடன் ஒன்றால் ஒன்று விளைவதாகவும் உள்ளன. இவை முகிழ்த்த நிலையில் கண்ணீர் ஊற்றெழ வேண்டும். கார் பூத்த கனைமழைபோல் கண்ணீர் கலுழ வேண்டும். கண்ணீர் பெருகிக் கால்வழிந்தோட வேண்டும். இது ஆன்ம காரியம். அப்போது மெய் உணர்வு பிறக்கும். ஆண்டவனது திருவருள் ஒளியாக உணர்வில் பட்டு இயலும். அருளொளி நம்முள் காரியப்பட்டுப் பூதவுடம்பு பொன்னுடலாகிப் பொலியும்; ஒளி உடம்பாக ஓங்கும்; சுத்த தேகமாக மாறும்; சுவர்ண தேகமாக ஒளிரும்; நித்திய தேகமாக நிலைக்கும்; அன்புருவமாக அமையும். இத்தேகம் நழுவாமல் நித்தியமாக என்றும் நின்று நிலவும். அதன்பின் ஓமயத்திரு உருவமாக மாறும். அதற்கு மேல் ஞானதேகமாக, வான் வடிவமாக, இன்புருவமாக மாறிக்கடவுள் வடிவிற் கலந்து கடவுள் மயமாகும். இதுவே ஒப்பற்ற

பெருவாழ்வு. இதுவே ஆன்ம இன்பசுகம். இதுவே உண்மை முத்திநிலை. இதற்கெல்லாம் மூலமாகக உள்ளது கரணங்களின் திறமாகலின்

''மரணப் பெரும்பிணி வாரா வகைமிகு
கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே''

**திரு.** VI : 1 : 1327

என்று அடிகள் கூறுவாராயினர். மேலும்,

''ஓவுறாத் துயர்செயு முடிம்புதான் என்றும்
சாவுறாது இன்பமே சார்ந்து வாழலாம்''

**திரு.** VI : 132 : 55

என்று கூறிய அடிகள் இவ்வாழ்வு சன்மார்க்க நன்னிலை மேவினால் கிடைக்கும் என்றும் அறிவுறுத்துகின்றனர்.

''பொத்திய மலப்பிணிப் புழுக்கு ரம்பைதான்
சித்தியற் சுத்தசன் மார்க்கச் சேர்ப்பினால்
நித்திய மாகியே நிகழு மென்பது
சத்தியஞ் சத்தியஞ் சகத்து ளீர்களே''

என்றமையின் சுத்த ஞான நெறி நின்று குருதுரிய நன்னிலையில் சமரச சன்மார்க்கங் கூடி எதிரற்ற வாழ்வில் வாழவேண்டும் என்பதாயிற்று.

**அருளமுதம்**

இறவாமைக்கு சுத்த சன்மார்க்கத்தில் அமுதம் அருந்துவதாகிய இன்னொரு சாதனமும் உண்டு. பலவகையான அமுதங்கள் பேசப்படுமாயினும் மேதினிமேல் வாழ்வு நிலைக்கவைப்பது அருளமுதம் சன்மார்க்க நெறி நின்றார்க்கு சுத்த ஞான சித்தியின்போது சிற்சபையில் விளைவதாகலின் இதனை ஞானவமுதமென்றுங் கூறுவர்.

''சாகா அருளமுதம் தானருந்தி நான்களிக்க''

**திரு.** VI : 96 : 3

''ஊனஉடம்பே ஒளியுடம்பாய் ஓங்கிநிற்க
ஞானவமு தெனக்கு நல்கியதே''

**திரு.** VI : 99 : 6

அருளமுதம் பற்றிய பல உண்மைகளை அடிகளின் அருள் மொழி விளக்குகின்றது. எனினும் விரிவஞ்சி அதன் சிறப்பியல்பைச் சற்று சிந்திப்பாம். கரும்புறு சாறும், கனிந்த முக்கனிச் சாறும், தீம்பாலும் கோல்தேனும், கூட்டி ஒன்றாகி, மணங்கொளும் பதத்தில் இயற்றிய உணவென்று பல்கால் உரைக்கினும் நிகர் ஆகாதது, இன்ப மயமானது; கருதுதற் கரியது; நலந்தரு விளக்கமும் நவிலருந்தண்மையும் உள்ளது.

''உள்ளதாய் என்றும் உள்ளதாய் யென்னுள்
உள்ளதாய் யென்றன் உயிர்உளம் உடம்புடன்
எல்லாம் இனிப்ப இயலுறு சுவையளித்து
எல்லாம் வல்லசித் தியற்கைய தாகிச்
சாகா வரமும் தனித்தபே ரறிவும்
மாகா தவிற்சிவ வல்லப சத்தியும்

செயற்கரு மனந்த சித்தியு மின்பமும்
மயக்கறத் தருந்திறல் வண்மைய தாகிப்
பூரண வடிவாய்ப் பொங்கிமேற் றதும்பி
ஆரண முடியுடன் ஆகம முடியும்
கடந்தென தறிவாங் கனமேற் சபைநடு
நடந்திகழ் கின்றமெய்ஞ் ஞானவாரமுதே''

**திரு.** VI : 1 : 1255-74

என்று இதனை அருட்பெருஞ்சோதியாகவே காண்கின்றார்கள் அடிகள். இத்துணைச் சிறப்புடைய அருளமுதம் சிற்சபை நடங்கண்ட புண்ணியர்களுக்கு சுவர்ண தேகத்தில் சுரப்பதாகும். ''மரண நவைதீர்க்கும் கற்பம் கொடுத்தாய்'' (**VI : 90 : 9**) என்று கூறுவது ஒருக்கால் அருளமுதமாக இருக்குமோ? இவ்வினாவைத்''தம்மை மறந்து அருளமுதம் உண்டு தேக்கும் தகையுடையார் திருக்கூட்டம் சார்ந்து'' (**I : 5 : 93**) எழுப்பவேண்டும். அருளமுதமுண்டு மரணந்தவிர்த்தலோடு அமையவில்லை சன்மார்க்க முத்திநிலை.

மேலே குறிப்பிட்ட ஞானசரியைத் திருப்பாட்டில் அடிகள் ''பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருணமிதுவே'' என்று கூறி அழைக்கின்றனர். திருவருள் நிறைந்துள்ள சபைகள் மூன்று. அவை பொற்சபை, சிற்சபை, ஞானசபை எனப்படும். பொற்சபையும் சிற்சபையும் புறத்தே ''சிதம்பரம் எனும் பெருங்கோயி''லில் அமைக்கப் பெற்றுள்ளன. சத்திய ஞானசபையை அடிகள் தம்முட் கண்டனர். இதுபோலவே பொற்சபையும், சிற்சபையும் தம்முட்கண்டதோடு அவற்றுள் புகுந்து அமுதமுண்டு சொந்தமாக்கிக் கொண்டனர். சிற்சபை புருவமத்தியில் அடியில் உள்ளது. பொற்சபை அதன்மேல் உள்ளதென்பர். இவற்றை எமது **சுத்த சன்மார்க்க விளக்கம்** சிறிது சொல்லும்.

அருளனுபவத்தில் பொற்சபை நடமும் சிற்சபை நடமும் கண்டு களித்தனர். சிற்பசபை கண்டோமென்றும், பொற்சபை புகுந்தோமென்றும், சிற்சபையும் பொற்சபையும் சேர்வித்தானை என்றும், அடிகள் கூறுவதுபோலத் தாம் வடற்பெரு வெளியில் புறத்தேகண்ட சத்திய ஞானசபையில் புகுந்தோமென்றோ, கண்டோமென்றோ, உண்டோமென்றோ, கூறக்காண்கிலம். ஆதலின், பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே யென்றது சிதம்பரங் கோயிலிலுள்ள பொற்சபை சிற்சபைகளையன்று என்பது புலனாகும்.

சிவபரம் பொருளை கனகசபை எனப்படும் பொற்சபை நடுவே கண்டதுண்டு, அந்த அருட்பெருஞ்சோதியை சிற்சபையில் அருளமுதமாய், ஆனந்தக் கள்ளாக உண்டதும் உண்டு. இது என்றும் இறவாத நிலையில் இருத்தும் கள்ளாகும். இதையுண்ட என்னை அடுத்தடுத்துக் கண்டால், அவர்க்கும் அது சாகாக்கலை அறிவு தரும் என்று கூறியருளுகின்றார். உண்பவர்க்கன்றி அவரைக் கண்டவர்க்கும் அது களிப்பருளுஞ் சிறப்பைக் காண்க.

''கள்ளுண்டா னெனப்புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையில் உண்டதுமுண் டடிநான்
எள்ளுண்ட பலவிடயத் திறக்குங்கள் ளன்றே
என்றுமிற வாநிலையி லிருத்துங்கள்''

**திரு.** VI : 82 : 12

ஆகவே சுத்த சன்மார்க்க நிலையனுபவம் பெற்று உண்மை முத்தி அடைதற் பொருட்டு அமையங்கூறி எல்லோரையும் பொற்சபை சிற்சபைகட்கு அழைத்தனர்.

**முற்ற முடிந்த சன்மார்க்க முத்திப்பேறு.**

இதுகாறும் எழுந்த வேத, ஆகம, சித்தாந்த, சாத்திர தோத்திரங்கள் எல்லாம் உடல் நழுவிய பின் ஆன்மா சிவத்துடன் இரண்டறக் கலத்தலே முத்திப்பேறு என்று உரைப்பதை முன்னரே கண்டோம். சுத்த சன்மார்க்கத்தில் ஆன்மா தூலதேகத்தில் நின்று இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம் முதலியவற்றால் பக்குவப்பட்டு,

அவனருளால் தத்துவம் அனைத்தும் தனித்தனி கடந்து திரைகள் நீங்க, தத்துவாதீத மேல் நிலையில் தூலம் சுத்த தேகம் ஆகப்பெற்று, உயிரனுபவமுற்று, அருளமுதம் உண்டு பிரணவ தேகத்தில் நின்று, அருள் அனுபவம் சிறந்து, அருட்சத்தியாகி, சிவத்தைப்புறம் புணர்ந்து, சிவானுபவத்தில் திளைத்துப் பேரின்பப் பெருவாழ்வில் ஞான தேகம் சித்திக்க, அகம்புணர்ந்து, சிவமாகி சர்வஞ்ஞுத்துவம் பஞ்ச கிர்த்திய கர்த்தத்துவம் முதலிய எல்லா சிவ வல்லப சித்தியும் உடையதாய் விளங்கி சிவானுபவச் செல்வமாகி, சுத்த சிவதுரியாதீதத்தே என்றும், எங்கும், சுத்த சிவமயமாய், அருட்பெருஞ்சோதியாய், நிறைந்திருக்கும். இதுவே சுத்த சன்மார்க்க முத்திப்பேறு. இந்த ஒப்பற்ற பேறு பெற்ற வள்ளற் பெருமான் மலரடி வாழ்த்தி வணங்குவோம்.

''வாய்மணக்குற மனமெலா மணக்க
வையம் வானக மற்றுள மணக்கத்
தூய்மணத்த மாமறைமுடி மணக்கத்
தூயவாகமத் தொல்சிரம் மணக்கத்
தாய்மணக்குறுங் கருணையினாய் என்
தலைமணக்குறத் தரித்தபூங் கழல்கள்
ஏய்மணத்தசண் முகசிவ குருவோம்
இராமலிங்கம் ஓம் சிவாயசற் குருவோம்''.

**அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி**
**தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி**

திருவருட்பிரகாச வள்ளலார் அருளிய

# உண்மை நெறி

## நாம் பெறும் புருஷார்த்தம் நான்கு

1.ஏமசித்தி 2.சாகாக் கல்வி 3.தத்துவ நிக்கிரகஞ் செய்தல் 4.கடவுள் நிலையறிந்து அம்மயமாதல்

## இவைகளை பெறுவதற்கு ஒழுக்கம் நான்கு வகைப்படும்.

1.இந்திரிய ஒழுக்கம் 2.கரண ஒழுக்கம் 3.ஜீவ ஒழுக்கம் 4.ஆன்ம ஒழுக்கம்

## 1. இந்திரிய ஒழுக்கம்

**இந்திரிய ஒழுக்கமாவது :-** கொடிய சொல் செவிபுகாது நாதம் முதலிய ஸ்தோத்திரங்களைக் கேட்டல்; அசுத்த பரிசமில்லாது தயாவண்ணமாகப் பரிசித்தல்; குரூரமாகப் பாராதிருத்தல்; உருசி விரும்பாதிருத்தல்; சுகந்தம் விரும்பாதிருத்தல்; ஜீவஹிம்சை நேரிடுங் காலத்தில் எவ்வித தந்திரத்தினாலாவது தடை செய்தல்; பெரியோர்கள் எழுந்தருளியிருக்கும் இடங்களுக்குச் செல்லுதல்; ஜீவ உபகார நிமித்தமாய் சாதுக்கள் வாசஸ்தானங்களிலும் திவ்ய திருப்பதிகளிலும் சஞ்சரித்தல்; நன்முயற்சியில் கொடுத்தல் எடுத்தலாதி செய்தல்; மித ஆகாரஞ் செய்தல்; மிதபோகஞ் செய்தல்; மலஜலோபாதிகளைக் கிரமமாய் ஒழித்தல்; காலபேதத்தாலும் உஷ்ண ஆபாசத்தாலும் தடை நேர்ந்தால் ஔஷதி வகைகளாலும் பௌதிக மூலங்களாலும், சரபேத அஸ்த பரிச தந்திரத்தாலும், மூலாங்கப் பிரணவத்யான சங்கற்பத்தாலும் தடை தவிர்த்துக்கொள்ளல்; (மந்ததரனுக்கு) சுக்கிலத்தை அக்கிரமாதிக்கிரமத்தில் விடாது நிற்றல்; (தீவிரனுக்கு) எவ்வகையிலும் சுக்கிலம் வெளிப்படாமை நிறுத்தல்; இடைவிடாது கோசத்தைக் கவசத்தால் மறைத்தல், இதுபோல் உச்சி, மார்பு முதலிய அங்கங்களையும் மறைத்தல்; சஞ்சரிக்குங் காலத்தில் காலில் கவசம் தரித்தல்; அழுக்காடை யுடுத்தாதிருத்தல்; முதலியன இந்திரிய ஒழுக்கம்.

## 2. கரண ஒழுக்கம்

**கரண ஒழுக்கமாவது:-** மனதைச் சிற்சபையின் கண்ணே நிறுத்தல்; அதாவது முதலில் புருவ மத்தியில் நிற்கச் செய்தல்; துர்விஷயத்தைப் பற்றாதிருக்கச் செய்தல்; ஜீவதோஷம் விசாரியாதிருத்தல்; தன்னை மதியாதிருத்தல்; இராகாதி நீக்கி இயற்கைச் சத்துவமயமாதல்; தனது தத்துவங்களை அக்கிரமத்திற் செல்லாது கண்டித்தல் முதலியன கரண ஒழுக்கம்.

## 3.ஜீவ ஒழுக்கம்

**ஜீவ ஒழுக்கமாவது:-** ஆண் மக்கள், பெண் மக்கள் முதலிய யாவர்களிடத்திலும் ஜாதி, சமயம், மதம், ஆசிரமம், சூத்திரம், கோத்திரம், குலம், சாஸ்திர சம்பந்தம், தேசமார்க்கம், உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் பேதம் நீக்கி எல்லவருந்தம்மவர்களாய்ச் சமத்திற் கொள்ளுதல் ஜீவ ஒழுக்கம்.

## 4.ஆன்ம ஒழுக்கம்

**ஆன்ம ஒழுக்கமாவது:-** யானை முதல் எறும்பு ஈறாகத் தோன்றிய சரீரங்களிலுள்ள ஜீவான்மாவே திருச்சபையாகவும் அதனுள் பரமான்மாவே பதியாகவும் கொண்டு யாதும் நீக்கமற எவ்விடத்தும் பேதமற்று எல்லாந் தானாக நிற்றல் ஆன்ம ஒழுக்கம்.

இவ்வண்ணம் நின்றால், மேற்குறித்த அரும்புருஷார்த்தம் கைகூடும்.

அன்பே அருட்பெருஞ்சோதி
ஆன்மநேய உரிமைக்கு தயவு வேண்டும்.
இருளான மலமறுத் திகபரங் காண்.
ஈரமும் அன்பும் கொண்டு இன்னருள் பெறு.
உயிருள்யாம் எம்முள் உயிர்! இவையுணர்ந்தே உயிர் நலம் பரவுக!
ஊன உடம்பே ஒளியுடம்பா யோங்கி நிற்க ஞானவமுதங் கொள்.
எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க.
ஏகாத கல்விதான் சாகாத கல்வி.
ஐவகைப் பூதவுடம் பழிந்திடில் என்புரிவீர்.
ஒருமையின் உலகெலாம் ஓங்குக!
ஓம் சிவாய வென்றுன்னுதி மனமே!

********************************